யாருய்ப்பெருகும்பெருங்கருணை யரசேயென்னையாள் வானே. (எ)

வானேமுதலாம்பெரும்பூதம்வகுத்துப்புரந்துமாற்ற வல்ல, கோனேயென்னைப்புரக்குநெறிகுறித்தாயிலையே கொடியேனைத், தானேபடைத்திங்கென்னபலன்றன் னைப்படைத்தாயுன்கருத்தை, நானேதென்றிங்கறியே னேநம்பினேன்கண்டருள்வாயே. (அ)

கண்டார்கண்டகாட்சியுநீகாணார்காணுக்கள்வனுநீ, ப ண்டாருயிர்நீயாக்கையுநீபலவாஞ்சமயப்பகுதியுநீ, யெ ண்டோண்முக்கட்செம்மேனி யெந்தாய்நினக்கேயெவ் வாறு, தொண்டாய்ப்பணிவரவர்பணிநீகூட்டிக்கொள் வதெவ்வாறே. (கூ)

கூட்டியெனதென்றிடுஞ்சுமையைச்சுமத்தியெனையு ஞ்சுமையாளாக், கூட்டிப்பிடித்துவினைவழியேகூத்தா ட்டினையேநினதருளால், வீட்டைக்கருதுமப்போதுவெ ளியாமுலைகவியப்பனைத்து, மேட்டுக்கடங்காச்சொற்ப னம்போலெந்தாயிருந்ததென்சொல்வேன். (க0)

## வம்பனேன்.

வம்பனேன்கள்ளங்கண்டு மன்னருள்வெள்ளராய, வும்பர்பாலெவல்செய்யென் றுணர்த்தினையோகோவா னோர், தம்பிரானேநீசெய்த தயவுக்குங்கைம்மாறுண் டோ, வெம்பிரானுய்ந்தேனுய்ந்தே னினியொன்றுங்கு றைவிலேனே. (க)

குறைவிலாநிறைவாய்ஞானக் கோதிலானந்தவெள்ளத், துறையிலேபடிந்துமூழ்கித் துளைந்துநான்றேன் றுவாருள், ஞறையிலேயுணர்த்திமோன வொண்சுடர் வைவாடந்த, விறைவனேயுனைப்பிரிந்திங் கிருக்கிலேனிருக்கிலேனே. (௨)

இருநிலமாதிநாத மீறதாமிவைகடந்த
பெருநிலமாயதூய பேரொளிப்பிழம்பாய்நின்றங்
கருதருமகண்டானந்தக் கடவுணின்காட்சிகாண, வருக
வென்றழைத்தாலன்றி வாழ்வுண்டோவஞ்சனேற்கே. (௩)

வஞ்சனைபழுக்காறுதி வைத்திடும்பாண்டமான
நெஞ்சனைவலிதின்மேன்மே னெக்குநெக்குருகப்பண்
ணி, யஞ்சலிசெய்யுங்கையு மருவிநீர்விழியுமாகத்
தஞ்சமென்றிரங்கிக்காக்கத் தற்பராபரமுனக்கே. (௪)

உனக்குநானடித்தொண்டாகி யுன்னடிக்கன்புசெய்ய
வெனக்குநீதோற்றியருளே லென்றுநானெந்நாளோ
மனக்கிலேசங்கடந்த மாதவர்க்கிரண்டற்றேங்குந்
தனக்குநேரில்லாவொன்றே சச்சிதானந்தவாழ்வே. (௫)

வாழ்வெனவயங்கியென்னை யாசற்கெய்தமருட்டும் பாழ்த்த, [illegible] குன்னையுங்கிட்டி வேறே, தாழ்வெனுஞ்சமயமீங்கித் தவமுமனைக்கற்றார் கட்கெல்லாஞ், சூழ்வெளிப்பொருளேமுக்கட் சோதியேயமரரேறே. (௬)

ஏறுவாம்பரியாவாடை யிருங்கலையுரியாவென்று
நாறுநற்சாந்தநீறு நஞ்சமேயமுதாக்கொண்ட
கூறருங்குணத்தோயுன்றன் குரைகழல்குறுகினல்லா
லாறுமோதாபசோப மகலுமோவல்லலுற்றேனே. (எ)

ஞானமுந்தவமும்யோகத் தன்மையுமுணராவென்பா
ஞானமுந்தெவிட்டாவின்ப நன்மையுநல்குவாயோ
பானலங்கவர்ந்திருஞ்சொற் பச்சிளங்கிள்ளைகாண
வானவரிறைஞ்சமன்றுள் வயங்கியநடத்திறைனே. (அ)

நடத்திடுமிவ்வுலகையெல்லா நாதநீநிறைந்ததன்மை
திடத்துடனறிந்தானந்தந் தெள்ளமுதருந்திடாதே
விடத்திராணையகாம வேட்கையிலழுந்திமாயைச், சட
த்திணைமெய்யென்றெண்ணித் தளரவோதனியனேனே.

தனிவளர்பொருளேமாறாத் தண்ணருங்கருணைபூத்த
வினியபற்பலமேமுக்க ணெந்தையேயினைக்கன்பின்றி
நனிபெருந்துடிலங்காட்டு நயனவேற்கரியகூந்தல்
வனிதையர்மயக்கிலாழ்ந்து வருந்தவோவம்பனேனே.

## சிவன்செயல்.

சிவன்செயலாலேயாதும் வருமெ[illegible]தேறேனே,
மலக்குருட்டுலகமெல்லா மதத்தி[illegible]றைசைவெள்ளம்,
சவார்த்துதெகாண்டிழுப்பத்தக் [illegible]ட்டிலையகப்பட்டே
னையோ, பவத்தையிட்டிட[illegible] பதைக்கின்றேன்பாவி
யேனே. (௯)

பாவியேனினியென்செய்கேன் பரமனேயணிந்து
பாதஞ், சேவியேன்விழிநீர்மல்கச் சிவசிவவென்றுதே
ம்பி,யாவியேநிறையவந்த வமுதமேயென்னேனந்தோ
சாவியோஞ்சமயத்தாழ்ந்து சகத்திடைத்தவிக்கின்றே
னே. (உ

இடைந்திடைந்தேங்கிமெய்புளகிப்ப வெழுந்தெழு
தையநின்சரண, மடைந்தனனினிநீகைவிடேலுனக்கே
யபயமென்றஞ்சலிசெய்துள், ளுடைந்துடைந்தெழு
சித்திரப்பாவையொத்துநானசைவறநிற்பத், தொடர்
துநீயெனையாட்கொள்ளுநாளென்றோ சோதியேயா
நாயகனே. (௩

ஆதியாய்நடுவா யந்தமாய்ப்பந்தம்யாவுமற்றகம்பு
நிறைந்த, சோதியாய்ச்சுகமாயிருந்தவெம்பெருமா
ன்றெண்டனேன்சுகத்திலேயிருக்கப், போதியாவண்ண
ங்கைவிடன்முறையோ புன்மையேனென்செய்கேன்
னமோ, வாதியாநின்றதன்றியும்புலன்சேர்வாயிலே
தீயினுங்கொடிதே. (௪

வாயிலோரைந்திற்புலனெனும்வேடர்வந்தெனையீர்
துவெங்காமத், தீயிலேவெதுப்பியுயிரொடுந்தின்னச்
ந்தைநைந்துருகிமெய்ம்மறந்து, தாயிலாச்சேய்போ
லைந்தலைப்பட்டேனருயினுங்கருணையாமன்று, ஞாயி
மாகியொளிவிடுமணியேநாதனே ஞானவாரிதியே. (ரு

ஞானமேவடிவாய்த்திகழ்வோர்தேடு நாட்டமேநா
டத்துணிறைந்த, வானமே[illegible]க்குவந்துவந்தோன்

மார்க்கமேமருளர்தாமறியா, மோனமேமுதலேமுத்தி நல்வித்தே முடிவிலாவின்பமேசெய்யுந், தானமேதவ மேநின்னை நானினைந்தேன் றமியனேன்றனை மறப்பத ற்கே. (சு)

மறமலியுலகவாழ்க்கையேவேண்டும் வந்துநின்னன் பர்தம்பணியா, மறமதுகிடைக்கின்றியானந்த வற்பு தநிட்டையினிமித்தந், துறவதுவேண்டு மௌனியாயெ னக்குத் தூயநல்லருடரினின்னம், பிறவியும்வேண்டும் யானெனதிறக்கப் பெற்றவர்பெற்றிடும்பேறே. (எ)

பெற்றவர்பெற்றபெருந்தவக்குன்றே பெருகியகரு ணைவாரிதியே, நற்றவத்துணையேயானந்தக்கடலே ஞா துருஞானஞேயங்க, ளற்றவர்க்கற்றதநட்புடைக்கலப் பே யனேகமாய்நின்னடிக்கன்பு, கற்றதுங்கேள்விகே ட்டதுநின்னைக் கண்டிடும்பொருட்டன்றேகாணே. (அ)

அன்றுநால்வருக்குமொளிநெறிகாட்டு மன்புடைச் சோதியேசெம்பொன், மன்றுண்முக்கண்ணுங்காளக ண்டமுமாய் வயங்கியவானமேயென்னுட், டுன்றுகூரி ருளைத்துரந்திடுமதியே துன்பமுமின்பமுமாகி, நின்ற வாதனையைக் கடந்தவர்நினைவே நேசமேநின்பரம்யா னே. (கூ)

யானெனல்காணேன்பூரணநிறைவில் யாதினுமிரு ந்தபேரொளிநீ, தானெனநிற்குஞ்சமத்துறவென்னைத் தன்னவனுக்கவுர்தருங்காண், வானெனவயங்கியொன்

றிரண்டென்னுமார்க்கமாநெறிதந்துமாறுத், தேனென
ருசித்துளன்பரைக்கலந்தசெல்வமேசிற்பரசிவமே.(கo

---

## தன்னையொருவர்.

தன்னையொருவர்க்கறிவரிதாய்த் தானேதானுயொ
ருநிறைந், துன்னற்கரியபரவெளியாயுலவாவமுதாயெ
ளிவிளக்கா, யென்னுட்கலந்தாயானறியா திருந்தாய்
றைவாவினியேனு, நின்னைப்பெறுமாறெனக்கருளா ன
லையைக்கொடுக்கநினையாயோ. (க

நினையுநினைவுக்கெட்டாத நெறிபெற்றுணர்ந்தநெ
யாளா, வினையைக்களைக்கும்பரமவின்ப வெள்ளப்பெ
ருக்கேகினதருளான், மனைவிபுதல்வரன்னைபிதா மாடு
டென்றிடுமயக்கந், தனையுமறந்திங்குனைமறவாத் தல
மைவருமோதமியேற்கே. (உ

வரும்போமென்னுமிருநிலைமைமன்றுதொருதன்மை
த்தாகிக், கரும்போதேனேமுக்கனியோவென்னவெ
னுட்கலந்துநலந், தரும்பேரின்பப்பொருளேநின் றன
னைநினைந்துநெக்குருகே, ணிரும்போகல்லோமரமே
வென்னிதயமியாதென்றறியேனே. (ங

அறியுந்தரமோநானுன்னையறிவுக்கறிவாய்நிற்கை
னுற், பிறியுந்தரமோநீயென்னைப் பெம்மானேபேரின்
மதாய்ச், செறியும்பொருணீநின்னையன்றிச் செறியா

பொருளுன்பெறும்பேற்றை, நெறிநின்றுமுகவிசாரித்தா னினக்கோவில்லையெனக்காமே. (௪)

எனதென்பதும்பொய்யானெனல்பொய் யெல்லாமிறந்தவிடங்காட்டு, நினதென்பதும்பொய்நீயெனல்பொய் நிற்குநிலைக்கேநேசித்தேன், மனதென்பதுமோவென்வசமாய் வாராதையநின்னருளோ, தனதென்பதுக்குமிடங்காணேன் றமியேனெவ்வாறுய்வேனே. (௫)

உய்யும்படிக்குன்றிருக்கருணை யொன்றைக்கொடுத்தாளுடையாய்பாழ்ம், பொய்யுமவாவுமழுக்காறும் புடைபட்டோடுநன்னெறியா, மெய்யுமறிவுபெறும்பேறும் விளங்குமெனக்குன்னடியார்பாற், செய்யும்பணியுங் கைகூடுஞ் சிந்தைத்துயரந்தீர்ந்திடுமே. (௬)

சிந்தைத்துயரொன்றுருபாவி சினந்துசினந்துபோர் முயங்க, நிந்தைக்கிடமாய்ச்சகவாழ்வை நிலையென்றுணர்ந்தேநிற்கின்றே, னெந்தப்படியுன்னருள்வாய்க்குமெனக்கெப்படிநீயருள்செய்வாய், பந்தத்துயரற்றவர்க்கெளிய பரமானந்தப்பழம்பொருளே. (௭)

பொருளைப்பூவைப்பூவையனைப் பொருளென்றெண்ணுமொருபாவி, யிருளைத்துரந்திட்டொளிநெறியை யென்னுட்பதிப்பதென்றுகொலோ, தெருளத்தெருளவன்பர்நெஞ்சந் தித்தித்துருகத்தெவிட்டாத, வருளைப்பொழியுங்குணமுகிலே யறிவானந்தத்தாரமுதே. (௮)

ஆராவமிர்தம்விரும்பினர்க ளறியவிடத்தையமிர்தா க்கும், பேரானந்தசித்தனெனும் பெரியோயாவிக்குரி யோய்கேள், காரார்கிரகவலையினிடைக்கட்டுண்டிருந்த களைகளெல்லா, மூராலொருநாள்கையுணவேற் றுண் டாலெனக்கிங்கொழிந்திடுமே. (௯)

எனக்கென்றிருந்தவுடல்பொருளும் யானுநினவென் றீந்தவண்ண, மனைத்துமிருந்துமிலதாக வருளாய்நில் லாதழிவழக்காய், மனத்துட்புகுந்துமயங்கவுமென் மதிக்குட்களங்கம்வந்ததென்னோ, தனக்கொன்றுவமை யறநிறைந்த தனியேதன்னந்தனிமுதலே. (௧0)

---

# ஆசையெனும்.

ஆசையெனும்பெருங்காற்றூ டிலவம்பஞ்செனவுமன தலையுங்கால, மோசம்வருமிதனாலேகற்றதுங் கேட்ட துந்தூர்ந்துமுத்திக்கான, நேசமுநல்வாசமும்போய்ப் புலனாயிற்கொடுமைபற்றிநிற்பரந்தோ, தேசுபழுத்தரு ள்பழுத்த பராபரமே நிராசையின்றேற் றெய்வமுண் டோ. (௧)

இரப்பானங்கொருவனவன்வேண்டுவகேட்டருள்செ யெனவேசற்றேதான், புரப்பான்றனருளுடி யிருப்பதா போலெங்குநிறைபொருளேகேளாய், மரப்பான்மைமனெ ஞ்சினன்யான் வேண்டுவகேட்டிரங்கெனவேமெளனத் தோடந், தரப்பான்மையருணிறைவி லிருப்பதுவோப ராபரமேசகசநிட்டை. (௨)

சாட்டையிற்பம்பரசாலம்போலெலா
மாட்டுவானிறையெனவறிந்துநெஞ்சமே
தேட்டமொன்றறவருட்செயலினிற்றியேல்
வீட்டுறந்துறவறமிரண்டுமேன்மையே. (ங)

தன்னெஞ்சநினைப்பொழியா தறிவிலிநான்ஞானமெ
னுந்தன்மைபேச, வுன்னெஞ்சமகிழ்ந்தொருசொல் லு
ரைத்தனையேயதனையுன்னியுருகேனையா, வன்னெஞ்
சோவிரங்காதமரநெஞ்சோ விருப்புநெஞ்சோவைரமா
ன, கன்னெஞ்சோவலதுமண்ணுங்கட்டிநெஞ்சோ வெ
ன்னெஞ்சங்கருநிற்றுனே. (ச)

வாழிசோபனம்வாழிநல்லன்பர்கள்
சூழவந்தருடோற்றமுஞ்சோபன
மாழிபோலருளையன்மௌனத்தா
லேழையேன்பெற்றவின்பமுஞ்சோபனம். (ரு)

கொடுக்கின்றோர்கள்பாற் குறைவையாதியானெனு
ங்குதர்க்கம், விடுக்கின்றோர்கள்பாற் பிரிகிலாதுள்ளன்
புவிடாதே, யடுக்கின்றோர்களுக் கிரங்கிடுந்தண்டமிழ
லங்க, றொடுக்கின்றோர்களைச்சோதியாததுபரஞ்சோதி.

உலகமாயையிலேயெளியேன்றனையுழலவிட்டனையே
யுடையாயரு, ளிலகுபேரின்பவீட்டினிலென்னையுமிருத்
தினைப்பதெக்காலஞ்சொலாயெழிற், றிலகவாணுதற்
பைந்தொடிகண்ணிணைதேக்க நாடகஞ்செய்தடியார்க்
கெலா, மலகிலாவினைதீர்க்கத்துசங்கட்டு மப்பனேயரு
ளானந்தசோதியே. (எ)

முன்னிலைச்சுட்டொழிதியெனப்பலகாலுநெஞ்சே நான் மொழிந்தேனேநின், றன்னிலையைக்காட்டாதே யென்னையொன்றாச்சூட்டாதேசரணன்போந்த, வந்நிலையேநிலையந்நிலையிலே சித்திமுத்தியனைத்துந்தோன்று, நன்னிலையீதன்றியிலைசுகமென்றே சுகர்முதலோர் நாடினாரோ. (௮)

அத்துவிதம்பெறும்பேறென் றறியாமல்யானெனும் பேயகந்தையோடு, மத்தமதியினர்போல மனங்கிடப்ப வின்னமின்னம்வருந்துவேனோ, சுத்தபரிபூரணமாய்நின்மலமாயகண்டிதமாய்ச்சொரூபானந்த, சத்திகணீங்காதவணந்தன்மயமாயருள்பழுத்துத் தழைத்தவொன்றே. (௯)

தந்தைதாயுநீயென்னுயிர்த்துணையுநீ சஞ்சலமதுதீர்க்க, வந்ததேசிகவடிவுநீயுனையலான் மற்றொருதுணைகாணே, னந்தமாதியுமளப்பருஞ்சோதியே யாதியேயடியார்தஞ், சிந்தைமேவியதாயுமானவனெனுஞ் சிரகிரிப்பெருமானே. (௧௦)

காதிலோலையைவளைந்துமேற் குமிழையுங்கறுவிவேள்கருநீலப், போதுபோன்றிடுங்கண்ணியர்மயக்கி லெப்போதுமேதளராமன், மாதுகாதலிபங்கனையங்கனா மாடமாளிகைசூழுஞ், சேதுமேவியராமநாயகன்றனைச் சிந்தைசெய்மடநெஞ்சே. (௧௧)

அண்டமுமாய்ப்பிண்டமுமாயளவிலாத வாருயிருக்கோருயிராயமர்ந்தாயானாற், கண்டவரார்கேட்டவரா

ருன்றாலுன்னைக் காண்பதல்லாலென்னறிவாற்காணப் போமோ, வண்டுளபமணிமார்பன்புதல்வனோடு மனைவி யொடுங்குடியிருந்துவணங்கிப்போற்றும், புண்டரிகபு ரத்தினிறுதாந்தமௌன போதாந்தநடம்புரியும்புனித வாழ்வே. (கஉ)

பொறியிற்செறிமைம்புலக்கனியைப் புந்திக்கவராற் புகுந்திழுத்து, மறுகிச்சுழலுமனக்குரங்கு மாளவாளா விருப்பேனோ, வறிவுக்கறிவாய்ப்பூரணமா யகண்டானந் தமயமாகிப், பிறிவற்றிருக்கும்பெருங்கருணைப் பெம் மானேயெம்பெருமானே. (கங)

உரையுணர்விறந்துதம்மை யுணர்பவருணர்வினூடே, சுரையிலாவின்பவெள்ளங் காட்டிடுமுகிலேமாருப், பரையெனுங்கிரணஞ்சூழ்ந்த பானுவேநின்னைப்பற்றித், திரையிலாநீர்போற்சித்தந் தெளிவனோசிறியனேனே.()

கேவலசகலமின்றிக்கீழொடுமேலாயெங்கு மேவியவருளின்கண்ணாய்மேவிடமேலாயின்பந் தாவிடவின்பாதீதத்தனியிடையிருத்திவைத்த தேவெனுமௌனிசெம்பொற் சேவடிசிந்தைசெய்வாம்.

நேற்றுளாரின்றுமாளாநின்றனரதனைக்கண்டும் போற்றிலேனின்னையந்தோபேர்க்கினேன்வீணேகால மாற்றிலேன்கண்டானந்தவண்ணலேயளவின்மாயைச் சேற்றிலேயின்னம்வீழ்ந்துதிளைக்கவோசிறியனேனே.()

போதமென்பதேவிளக்கொவ்வு மவித்தைபொய்யிரு ளாந், தீதிலாவிளக்கெடுத்திருட்டைவுஞ்சிக்கா, தாதலா லறிவாய்நின்றவிடத்தறியாமை, யேதுமில்லையென்றெ ம்பிரான்சுருதியேயியம்பும். (கஎ)

சுருதியேசிவாகமங்களேயுங்களாற்சொல்லு
மொருதனிப்பொருளைவயீதென்னவாயுண்டோ
பொருதிரைக்கடலுண்மணலெண்ணினும்புகலக்
கருதவெட்டிடாநிறைபொருளையார்காண்பார். ()

மின்னைப்போன்றனவகிலமென்றறிந்து மெய்ப்பொ ருளா, முன்னைப்போன்றநற் பரம்பொருளில்லையென் றோர்ந்து, பொன்னைப்போன்றநின் போதங்கொண்டின் பணிபொருந்தா, வென்னைப்போன்றுளவேழையரையா விங்கெவரோ. (கசு)

தாயுந்தந்தையுமெனக்குறவாவனுஞ்சாற்றி
ஞயுநீயுநின்னருளுநின்னடியருமன்றோ
பேய்னேன்றிருவடியிணைத்தாமரைபிடித்தே
ஞயனேயெனையாளுடைமுக்கணுயகனே. (உ௦)

காந்தமன்தயெதிர்காணிற் கருந்தாதுசெல்லுமந்தக் காந்தத்தொன்று தேய்ந்தவிடமெங்கேதானங்கேதான் சலிப்பறவுமிருக்கும் போற்,சாந்தபதப்பரம்பொருளே பற்றுபொருளிருக்கு மந்தாற்சலிக்குஞ்சித்தம், வாய்ந் தபொருளில்லையெனிற் சாமைநின்றநிலைவாய்க்குமன்றே. (உக)

பொற்புறுங்கருத்தேயகமாயதிற்பொருந்தக்
கற்பின்மங்கையனொனவிழிகதவுபோற்கவினச்
சொற்பனத்தினுஞ்சோர்வின்றியிருந்தநான்சோர்ந்து
நிற்பதற்கிந்தவினைவந்தவாறென்கொனிமலா. (௨௨)

வந்தவாறிந்தவினைவழியிதுவெனமதிக்கத்
தந்தவாறுண்டோவுன்றனுணர்விலையன்றித்தமியே
னொந்தவாறுகண்டிரங்கவுமிலைகற்றநூலா
லெந்தவாறினித்தற்பராவுய்குவேனைழ. (௨௩)

சொல்லாலும்பொருளாலு மளவையாலுந் தொடரா வொன்றைவருணெறியைத்தொடர்ந்துநாடி, நல்லார்களவையகத்தேயிருக்கவைத்தாய்நன்னர்நெஞ்சந்தன்னலுழக்கறுகுவேனோ, வில்லாளியாயுலகோடுயினாயின்றிட் டெண்ணரியயோகிலுக்குமிவனேயென்னக், கல்லாலின்கீழிருந்தசெக்கர்மேனிக் கற்பகமேபராபரமேகைலைவாழ்வே. (௨௪)

சாக்கிரமாறதலினிலிந்திரியம்பத்துஞ் சத்தாதிவசனுதிவாயுபத்து, நீக்கமிலந்தக்கரணம்புருடனோடு நின்றாறுமுப்பானொந்துநிலையுங்கண்டத், தாக்கியசொற்பனமதனில்வாயுபத்து மடுத்தனசத்தாதிவசனுதியாக, நோக்குகரணம்புருடனுடனேகூட றுவல்வரிருபத்தைந்தானுண்ணியோரே. (௨௫)

அழுத்தியிதயந்தனிற்பிராணஞ்சித்தஞ் சொல்லரியபுருடனுடன்மூன்றதாகும், வழுத்தியநாபியிற்றுரியம்பி

ராணமோடு மன்னுபுருடனுங்கூடவயங்காநிற்கு, மழுத் திடுமூலந்தன்னிற்றுரியாதீத மதனிடையேபுருடனென் றியமருஞானம், பழுத்திடும்பக்குவரறிவரவத்தையை ந்திற் பாங்குபெறக்கருவிநிற்கும்பரிசுதானே. (உ௬)

இடத்தைக்காத்திட்டசுவானெனப்புன்புலாலிறைச் சிச், சடத்தைக்காத்திட்டநாயினேனுன்னன்பர்தயங்கு மடத்தைக்காத்திட்டசேடத்தால்விசேடமாய்வாழ, வி டத்தைக்காத்திட்டகண்டத்தோய்நின்னருள்வேண்டும்

வாதனைப்பழக்கத்தினன்மனமந்தமனத்தா லோதவந்திடுமுறையுரைப்படிதொழிலுளவா மேதமம்மனமாயையென்றிடிற்கண்டவெல்லா மாதரஞ்செயாப்பொய்யதற்கையமுண்டாமோ. (உ௮)

ஐயவாதனைப்பழக்கமேமனநினைவதுதான் வையமீதினிற்பரம்பரையாதினுமருவு மெய்யினின்றெளிர்பெரியவர்சார்வுற்றுவிளங்கிப் பொய்யதென்பதையொருவிமெய்யுணருதல்போதம்.()

குலமிலான்குணங்குறியிலான்குறைவிலான்கொடி தாம், புலமிலான்றனக்கென்னவோர்பற்றிலான்பொரு ந்து, மிலமிலான்மைந்தர்மனைவியில்லானெவனவன்சு ஞ், சலமிலான்முத்திதரும்பரசிவனெனத்தகுமே.(௩௦)

கடத்தைமண்ணெனவுடைந்தபோதோ விந்தக்கருமச், சடத்தைப்பொய்யெனவிறந்துபோதோசொலத்தரு மம், விடத்தைநல்லமிர்தாவுண்டு பொற்பொதுவெளிக்

கே, நடத்தைக்காட்டியெவ்வுயிரையுநடப்பிக்குநலத்
தோய். (ரு௧)

நானெனவுநீயெனவுமிருதன்மைநாடாமனடுவேசும்
மா, தானமருநிலையிதுவேசத்தியஞ்சத்தியமெனநீதமி
யேனெற்கு, மோனகுருவாகியுங்கைகாட்டினையேதிரும்
பவுநான்முளைத்துத்தோன்றி, மானதமார்க்கம்புரிந்திங்
கலைந்தேனேயரந்தேனேவஞ்சனேனே. (ரு௨)

தன்மயஞ்சுபாவஞ்சுத்தந்தண்ணருள்வடிவஞ்சாந்த
மின்மயமானவண்டவெளியுருவானபூர்த்தி
யென்மயமெனக்குக்காட்டாதெனையபகரிக்கவந்த
சின்மயமகண்டாகாரந்தணுநிறைநிக்கமூர்த்தம். (ரு௩)

சிற்றறும்பனசிற்றறிவாளனேதெளிந்தான்
மற்றரும்பெனமலனொப்பேரறிவாகிக்
கற்றரும்பியகேள்வியான்மதித்திடக்கதிச்சீர்
முற்றரும்பியமௌனியாய்ப்பரத்திடைமுளைப்பான். ()

மயக்குசிந்தனைதெளிவெனவிருநெறிவகுப்பா
ரயக்குமொன்றன்பாலொன்றிலையெனனலவழக்கே
யியக்கமுற்றிடுமயக்கத்திற்றெளிவுறலினிதாம்
பயக்கவல்லதோர்தெளிவுடையவர்க்கெய்தல்பண்போ.

அருள்வடிவேமுழுமூர்த்தமவைகள்சோபானமென்
றே, சுருதிசொல்லியவாற்றுமேலதொழுந்தெய்வமெல்
லாமொன்றே, மருளெனக்கில்லைமுன்பின்வருநெறிக்கி

வ்வழக்குத், தெருளின்முன்னிலையாமுன்னைச்சேர்ந்தி யான்றெளிகின்றேனே. (கூசு)

எத்தனைப்பிறப்போவெத்தனையிறப்போவெளியனே ற்கிதுவரையமைத்த, தத்தனையெல்லாமறிந்தநீயறிவை யறிவிலியறிகிலேனந்தோ, சித்தமும்வாக்குந்தேகமுமி னவேசென்மமுழிமினியெனலாற்று, வைத்திடிங்கென் னைநின்னடிக்குடியாமறைமுடியிருந்தவான்பொருளே.

வான்பொருளாகியெங்குநீயிருப்பவந்தெனைக்கொடு த்துநீயாகா, தேன்பொருள்போலக்கிடக்கின்றேன்மு ன்னையிருவினைவாதனையன்றே, தீன்பொருளானவமி ர்தமேநின்னைச்சிந்தையிற்பாவனைசெய்யு, நான்பொரு ளானேனல்லனல்லரு சேநானிறந்திருப்பதுநாட்டம். ()

நாட்டமூன்றுடையசெந்நிறமணியேநடுவுறுநாயக விளக்கே, கோட்டமில்குணத்தோர்க்கெளியநிர்க்குண மேகோதிலாவமிர்தமேநின்னை, வாட்டமினெஞ்சந்தி ண்ணமாச்சேர்த்துவாய்மடுத்தருந்தினனுங்கே, பாட் டளிநறவுமுண்டயர்ந்ததுபோற் பற்றயர்ந்திருப்பதெந் நாளோ. (கூகூ)

என்னுடையுயிரோயென்னுளத்தறிவே யென்னுடைய ன்பெனுநெறியாய்,கன்னன்முக்கனிதேன்கண்டமிர்தெ ன்னக்கலந்தெனைமேவிடக்கருணை, மன்னியவுறவேயுன் னைநான்பிரியாவண்ணமென்மனமெனுங்கருவி, துன்னா துவழியற்றென்னுழைக்கிடப்பத் தண்ணருள்வரமரு வேண்டும். (சO)

---

## எனக்கெனச்செயல்.

எனக்கெனச்செயல்வேறிலையாவுமிங்கொருநின்
றனக்கெனத்தகுமுடல்பொருளாவியுந்தந்தேன்
மனத்தகத்துளவழுக்கெலாமாற்றியெம்பிரானீ
நினைத்ததெப்படியப்படியருளுதனீதம். (க)

உளவறிந்தெலாநின்செயலாமெனவுணர்ந்தோர்க்
களவிலானந்தமளித்தனையறிவிலாப்புன்மைக்
கள்வனாயினேற்கிவ்வணமமைத்தனைகருத்துத்
தளருந்தன்மையிங்காரொடும்புகலுவேன்றக்கோய். (உ)

என்னைத்தானின்னவண்ணமென்றறிகிலாவேழை
தன்னைத்தானறிந்திடவருள்புரிதியேற்றக்கோய்
பின்னைத்தானின்றனருள்பெற்றமாதவப்பெரியோர்
நின்னைத்தானிகராவெனவாழ்த்துவர்நெறியால். (ங)

ஏதமின்றித்தன்னடியிணைக்கன்புதானீட்டுங்
காதலன்பர்க்குக்கதிநிலையீதெனக்காட்டும்
போதநித்தியபுண்ணியவெண்ணரும்புவன
நாதநாதற்பராநானெவ்வாறுய்குவேனவிலாய். (ச)

வேதமெத்தனையத்தனைசிரத்திலும்விளங்கும்
பாதநித்தியபராம்பரநிரந்தரபரம
நாதநற்பரசிற்பராவடிவமாய்நடிக்கு
நீதநிர்க்குணநினையன்றியொன்றுநானினையேன். (ரு)

நெறிகடாம்பலபலவுமாயந்தந்தநெறிக்காஞ்
செறியுந்தெய்வமும்பலபலவாகவுஞ்செறிந்தா
லறியுந்தன்மையிங்காருனையறிவினாலறிந்தோர்
பிறியுந்தன்மையில்லாவகைகலக்கின்றபெரியோய். (சா)

பெரியவண்டங்களெத்தனையமைத்ததிற்பிறங்கு
முரியபல்லுயிரொத்தனையமைத்ததிற்குறுதி
வருவதெத்தனையமைத்தனையமைத்தருள்வளர்க்கு
மரியதத்துவவெனக்கிந்தவண்ணமேனமைத்தாய். (எ)

கணமதேனுநின்காரணந்தன்னையேகருத்தி
லுணருமாதவர்க்கானந்தமுதவினையொன்றுங்
குணமிலாதபொய்வஞ்சனுக்கெந்தைநிர்க்குணமா
மணமுலாமலர்ப்பதந்தரின்யாருனைமறுப்பார். (அ)

சன்னன்முக்கனிகண்டுதேன்சருக்கரைகலந்த
தென்னமுத்தியிற்கலந்தவர்க்கின்பமாயிருக்கு
நன்னலத்தநின்னற்பதந்தனையெனாநம்பச் [சேன்.
சொன்னவர்க்கெனுலாங்கைம்மாறில்லையென்சொல்

தந்தைதாய்தமர்மகவெனுமவையெலாஞ்சகத்திற்
பந்தமாமென்றேயருமறைவாயினுற்பகர்ந்த
வெந்தைநீயெனையின்னமவ்வல்லலில்லிருத்திச்
சிந்தைதான்றெளிந்தெவ்வணமுய்வணஞ்செப்பாய்.(கO)

துய்யன்றண்ணருள்வடிவினன்பொறுமையாற்றுயலங்கு, மெய்யனென்றுனையையனேயடைந்தனன்மெத்த, நொய்யனுண்ணியவறிவிலனென்னைநாருக்கும், பொய்யனென்றெனைப்புறம்விடினென்செய்வேன்புகலாய். (கக)

ஒன்றதாய்ப்பலவாயுயிர்த்திரட்கெலாமுமாகி
யென்றதாயென்றுமுள்ளதாயெயற்றினுமிசைய

நின்றதாய்நிலைநின்றிடுமறிஞரென்னெஞ்ச
மன்றதாயின்பவுருக்கொடுநடித்திடின்வாழ்வேன். (கஉ)

தனியிருந்தருட்சகசமேபொருந்திடத்தமியேற்
கினியிரங்குதல்கடனிதுசமயமென்னிதயக்
கனிவுமப்படியாயினதாதலாற்கருணைப்
புனிதநீயறியாததொன்றுள்ளதோபுகலாய். (கரு)

திருந்துசீரடித்தாமரைக்கன்புதான்செய்யப்
பொருந்துநாணல்லபுண்ணியஞ்செய்யுநாள்பொருந்தா
திருந்தநாள்வெகுதீவினையிழைத்தநாளென்று
லருந்தவாவுனைப்பொருந்துநாளெந்தநாளடிமை. (கச)

பின்னுமுன்னுமாய்நடுவுமாயாவினும்பெரிய
தென்னுந்தன்மையாயெவ்வுயிர்த்திரளையுமியக்கி
மன்னுந்தண்ணருள்வடிவமேயுனக்கன்புவைத்துந்
துன்னுமின்னலேன்யானெனுமகந்தையேன்சொல்லாய்

பின்னையன்னபொய்வாழ்க்கையேநிலையெனமெய்யா
முன்னைநான்மறந்தெவ்வணமுய்வணமுறையாய்
முன்னைவல்வினைவேரறமுடித்தென்றுமுடியாத்
தன்னைத்தன்னடியார்க்கருள்புரிந்திடுந்தக்கோய். (கசு)

எம்பராபரவெம்முயிர்த்துணைவவென்றிறைஞ்சு
மும்பரிம்பர்க்குமுளக்கணேநடிக்கின்றுயுன்ற
னம்பொன்மாமலர்ப்பதத்தையேதுணையெனவடிமை
நம்பினேனினிப்புரப்பதெக்காலமோநவிலாய். (கஎ)

பாடியாடிநின்றிரங்கிநின்பதமலர்முடிமேற்
சூடிவாழ்ந்தனரமலநின்னடியர்யான்றொழும்ப
னடியேயிந்தவுலகத்தைமெய்யெனநம்பித்
தேடினேன்வெறுந்தீமையேயென்னினிச்செய்வேன். ()

களவுவஞ்சனை காமமென்றிவையெலாங்காட்டு
மளவுமாயையிங்காரெனக்கமைத்தனனையா
வுளவிலேயெனக்குள்ளவாறுணர்த்தினுன்னடிமை
வளருமாமதிபோன்மதிதளர்வின்றிவாழ்வேன். (க௯)

வானநாயகவானவர்நாயகவளங்கூர்
ஞானநாயகநான்மறைநாயகநலஞ்சேர்
மோனநாயகநின்னடிக்கன்பின்றிமுற்றுந்
தீனனாயகம்வாடவோவென்செய்வேன்செப்பாய். (உ௦)

ஏதமற்றவர்க்கின்பமேபொழிகின்றவிறையே
பாதகக்கருங்கன்மனங்கோயிலாப்பரிந்து
சூதகத்தனாயாதினுமிச்சைமேற்றோன்றும்
வாதனைக்கிடமாயினேனெவ்வணம்வாழ்வேன். (உக)

தெளிவொடுகையோவறிகிலானறிவிலான்சிறிது
மளியிலானிவன்றிருவருட்கயலெனவறிந்தோ [னா
வெளியனுக்கினையென்செய்வேனென்செய்வேனென்
வொளியுமாய்நிறைவெளியுமாயாவுமாமுரவோய். (உஉ)

கண்ணினுண்மணியென்னவேதொழுமன்பர்க்கருக்[illegible]
ணெண்ணுகின்றநின்னருளெனக்கெந்நாளுறு[illegible]

மண்ணுவிண்ணுமற்றுள்ளனபூதமுமாருப்
யெண்ணுமாணுமாயல்லவாய்நிற்கின்றபெரியோய். ()

சகமெலாந்தனிபுரந்தனைதகவுடைத்தக்கோ
ரகமெலாநிறைந்தானந்தமாயினையளவின்
மகமெலாம்புரிந்தோரைவாழ்வித்தனைமாரு
விகமெலாமெனைப்பிறந்திடச்செய்ததேனெந்தாய். ()

ஏய்ந்தநல்லருள்பெற்றவர்க்கேவலாயெளியேன்
வாய்ந்தபேரன்புவளர்க்கவுங்கருணைநீவளர்ப்பா
யாய்ந்தமாமறையெத்தனையத்தனையறிவாற் [ய்.
றோய்ந்தபேர்கட்குந்தோன்றிலாத்தோன்றலாந்தூயோ

தக்கநின்னருட்கேள்வியோசிறிதின்றித்தமியேன்
மிக்கதெய்வமேநின்னின்பவெள்ளத்தில்வீழே
னொக்கருய்தந்தைதமகவெனும்பாசக்கட்டுடேனே [தேன்.
துக்கவெள்ளத்திலாழ்கின்றேனென்செய்வான்றுணிந்

பவம்புரிந்திடும்பாவியேற்கருணிலைபதியத்
தவஞ்செயும்படித்தயவுசெய்தருள்வதேகரும
மவம்புரிந்திடார்க்கானந்தவமிர்தத்தையளிக்க
நவங்கொடுத்துவத்திரையெறிகடலெனுநலத்தோய். ()

உற்றுணர்ந்தெலாநீயலதில்லையென்றுனையே
பற்றுகின்றனரெந்தைநின்னடியர்யான்பாவி
முற்றுமாயமாஞ்சகத்தையேமெய்யெனமுதரு
னற்றிருந்திடத்தொழில்செய்வான்றனைநிகரானேன். ()

---

மண்டலத்தின்மிசையொருவன்செய்தவித்தையகோ வெனவும்வாராதி, யண்டமவையடுக்கடுக்காயந்தா த்தினிறுத்துமவதானம்போல, வெண்டருநல்லறிலாண் டகோடியைத்தன்னருள்வெளியிலிலகவைத்துக், கொ ண்டுநின்றவற்புதத்தை யெவராலுநிச்சயிக்கக் கூடா வொன்றை. (க)

ஒன்றிரண்டாய்விவகரிக்கும் விவகாரங்கடந்தேழாம் யோகபூமி, நின்றுதெளிந்தவர்பேசாமௌனநியாயத் தைநிறைநிறைவைத்தன்னை, யன்றியொருபொருளில தாவெப்பொருட்குந்தான்முதலாயசலமாகி, யென்று முள்ள வின்பத்தைத்தன்னைன்றசாந்தபதவியற்கைத ன்னை. (உ)

பதமூன்றுங்கடந்தவர்க்குமேலானஞானபதப்பரிசு காட்டிச், சதமாகிநிராலம்பசாக்ஷியதா யாரம்பத்தன் மையாகி, விதமியாவுங்கடந்தவித்தைநயெறுமிருளைக்கி ன்டெமூந்துவிமலமாகி, ம[illegible]மாதுங்காணுதவானந்தசா கரத்தைமௌனவாழ்வை. (ங)

வாழ்வனைத்துந்தந்தவின்பமாகடலைநல்லமிர்தைமணி யைப்பொன்னைத், தாழ்வறவென்னுளத்திருந்ததத்துவ த்தையத்துவிதசாரந்தன்னைச், சூழ்பெரும்பேரொளி யையொளிபாந்தபரவெளியை யின்பச்சுகத்தைமாறு, வேமூலகுங் கலந்தின்றுய்நாளையாயென்றுமாமியற்கை தன்னை. (ச)

தன்னையறிந்தவர்தம்மைத்தாகுகச்செய்தருளுஞ்சம த்தைலோக; மின்னைநிகர்த்திடவழியாச்சொரூபானந்த

ச்சுடரைவேதமாதி, யென்னையறிவரிதென்னச் சமய
கோடிகளிடையவிடையருத, பொன்னைவிரித்திடுமுலக
த்தும்பருமிம்பரும்பரவும்புனிதமெய்யை. (௫)

பரவரியபரசிவமாயதுவெனலாய்நானெனலாய்ப்பா
சசாலம், விரவிநின்றவிசித்திரத்தையைக்யபதத்தினிரு
ந்தவிவேகந்தன்னை, யிரவுபகலினைப்புமறப்பெனுந்
தொந்தமறியார்கடியம்வேதச், சிரமெனவாழ்பராப
ரத்தையானந்தநீங்காதசிதாகாசத்தை. (௬)

அந்தமிலாதவனுபவத்தையனந்தமறையின்னமின்ன ம
தியேயென்று, நித்தியத்தைநிராமயத்தைநிர்க்குணத்
தைத்தன்னருளாநினைவுக்குள்ளே, வைத்துவைத்துப்
பார்ப்பவரைத்தாளுகவெந்நாளும் வளர்த்துக்காக்குஞ்,
சித்தினைமாதுவெளியைத்தன்மயமாமானந்தத் தெய்வ
ந்தன்னை. (௭)

தன்னிலேதானாகநினைந்துகளிந்தவிழ்ந்துசுகமாதி
யாகப், பொன்னிலேபணிபோலுமாயைதருமனமேயு
ன்புணர்கடேர்ந்தா, லென்னிலேயான்பிறப்பேனென
க்கினியாருன்போல்வாரில்லையில்லை, யுன்னிலோதிருவ
ருளுக்கொப்பாவாயென்னுயிர்க்கோருறவுமாவாய். (௮)

உறவுடலையெடுத்தவரிற்பிரமாதியேனுமுனையொழிந்
துதன்னாற், கறவுமரிதரிதன்றேருவிகபரமுமுன்னையன்றி
யாவதுண்டோ, வறிநினுன்னையசத்தென்னல்வழக்கன்
றுவசத்தெனவும்வாழ்த்துவேனென், சிறுமைகெட்பெ
ருமையினின்சென்மமேதையத்தினினிசெல்லல்வேண்டும்

வேண்டியநாளென்றோடும்பழகியநீயெனைப்பிரிந்தவி சாரத்தாலே, மாண்டுகிடக்கினுமந்தவெல்லையையும்பூர ணமாவணக்கஞ்செய்வே, னாண்டகுருமௌனிதன்னா லியானெனதற்றவனருளானாலேன்பூவிற், காண்டகவெ ண்சித்திமுத்தி யெனக்குண்டா மென்றாலென்கவலைதீர் வேன். (௰)

தீராதவென்சனனவழக்கெல்லாந்தீருமிந்தச்சனனத் தோடே, யாரேனுமறிவரியசீவன்முத்தியுண்டாகுமைய வையோ, காரேனுங்கற்பகப்பூங்காவேனுமுனக்குவமை காட்டப்போமோ, பாராதியாகவெழுமண்டலத்திலுன் மகிமைபகரலாமோ. (௰௧)

---

## பாயப்புலி.

பாயப்புலிமுனமான்கன்றைக்காட்டும்படியக்கில
மாயைப்பெரும்படைக்கே யிலக்காவெனைவைத்தனை
யோ, நீயெப்படிவகுத்தாலுநன்றேநின்பெருங்கருணை,
தாயொத்தடியர்க்கருள்சச்சிதானந்தநற்பரமே. (௧)

தற்பரமாஞ்சிற்பரமாகிமன்றந்தனினடித்தா
நிற்பரம்போருகன்மால்பணிநீதவொண்ணெஞ்சகமாங்
கற்பரந்தாங்குகனைந்திடவாவொத்தகாட்சிநல்கும்
பொற்பரமாயென்வினைக்கருந்தாதைப்பொடிசெய்ததே

செய்யுந்தவஞ்சற்றுமில்லாதநானுன்றிருவடிக்கே
கொய்யும்புதுமலரிட்டுமெய்யன்பர்குழாத்துடனே

கையுஞ்சிரமிசைக்கூப்பிநின்ருடிக்கசிந்துருகி
யுய்யும்படிக்கருள்செய்வதென்ருேபுலியூரத்தனே. (ங)

அத்தனைச்சிற்றம்பலவனையென்னுயிராகிநின்ற
சுத்தனைச்சுத்தவெளியானவனைச்சுகவடிவா
நித்தனைநித்தநிராதாரமாகியநின்மலனை
எத்தனைநாள்செல்லு மோமனமேகண்டிறைஞ்சுதற்கே.

கண்டாருளத்தினிற்காலூன்றிப்பெய்யுங்கருணைமுகி
லண்டார்புரத்துக்குமன்பர்வினைக்குமசனிதன்னைக்
கொண்டாடினூர்முனங்கூத்தாடுமத்தன்றன்கோலமெல்
லாம், விண்டாலம்மாவொன்றுங்காணுதுவெட்டவெறு
வெளியே. (ரு)

வெளியானநீயென்மனவெளியூடுவிரவினையா, வொ
ளியாருங்கண்ணுமிரவியும்போனின்றுலாவுவன்கா, ணை
ளியாருங்கொன்றைச் சடையாடவம்புலியாடக்கங்கை
த், துளியாடமன்றுணடமாடுமுக்கட்சுடர்க்கொழுந்தே.

கொழுந்தாதுறைமலர்க்கோதையர்மோகக்குளைகடலி
லழுந்தாதவண்ணநின் பாதப்புணைதந்தருள்வதென்ருே
வெழுந்தாதரவுசெயெம்பெருமானென் றிறைஞ்சிவிண்
ணேர், தொழுந்தாதையேவெண்பொடிபூத்தமேனிச்சு
கப்பொருளே. (எ)

சுகமாகுஞானத்திருமேனியாநல்லதொண்டர்தங்க
ளகமேபொற்கோயிலெனமகிழ்ந்தேமன்றுளாடியகற்
பகமேயுன்பொன்னடிநீழல்கண்டாலன்றிப்பாவிக்கிந்த
ச், செகமாயையானவருங்கோடைநீங்குந்திறமிலையே.

நீங்காதுயிருக்குயிராகின்றவினையறிந்தே,தூங்காமற்றூங்கினல்லாதெனக்குச்சுகமுமுண்டோ, வோங்காரமாமைந் தெழுத்தாற்புவனத்தை யுண்டுபண்ணிப், பாங்காநடத்தும்பொருளேயகண்டபரசிவமே. (க)

சிவமாதிநான்முகக்கோவந்தமாமறைசெப்புகின்ற
நவமாயிலங்கியவொன்றேயிரண்டற்றநன்மைபெறு
தவமேதருமைப்புலப்பொறிக்கேயென்னறிவுபொல்லாப், பவமேவிளைக்கவென்றேவெளிமானெனப்பாய்ந்தநுவே. (ய)

ஆறொத்திலங்குசமயங்களாறுக்குமாழ்கடலாய்
வீறிப்பரந்தபரமானவானந்தவெள்ளமொன்று
தேறித்தெளிந்துநிலைபெற்றமாதவர்சித்தத்திலே
யூறிப்பரந்தண்டகோடியெல்லாமின்றுலாவியதே. (யக)

நடக்கினுமோடினுநிற்கினும்வேறொருநாட்டமின்றிக்
கிடக்கினுஞ்செவ்விருக்கினுநல்லருட்கேள்வியிலே
தொடக்குமென்னெஞ்சமனமற்றபூரணத் தொட்டிக்குளே,முடக்குவன்யான்பரமானந்தநித்திரைமூடிடுமே.()

எண்ணுதெண்ணிய நெஞ்சேதுயரொழியென்னிரண்டு, கண்ணேயுறங்குறங்கென்றுணைமுக்கட்கருணைப்பிரான், றண்ணார்கருணைமௌனத்திருன்முத்திசாதிக்கலா, நண்ணுதொன்றில்லையெல்லாநலமுநமக்குளவே.

நானென்றொருமுதலுண்டென்றநான்றலைநாணவென்னுட், டானென்றொருமுதல்பூரணமாகத் தலைப்பட

டொப்பி, லானந்தந்தென்னறிவையெல்லாமுண்டவசகல்கி,மோனந்தனைவிளைத்தாலினியாதுமொழிகுவதே.

தானந்தவஞ்சற்றுமில்லாதநானுண்மைதானறிந்து
மோனம்பொருளெனக் கண்டிடச்சற்குருமோனனுமாய்த், தீனன்றனக்கிங்கிரங்கினையேயினிச்சிந்தைக்கென்று, மானந்தநானல்லவோபரமேசச்சிதானந்தமே. ()

எனக்கோர்சுதந்தரமில்லையப்பாவெனக்கெய்ப்பில் வைப்பாய், மனக்கோதகற்றும்பரம் பொருளேயென்னைவாழ்வித்திட, நினக்கேபரமினிநீங்காதபூரணநீள் கருணை, தனக்கேபரமினிச்சும்மாவிருக்கத் தருமென்றுமே. (௰க)

இடம்பெறும்வீடுமின்னார்செய்சுகமுமிருநிதியு, முடம்பைவிட்டாருயிர்போம்போதுகூடியுடன்வருமோ, மடம்பெறுமாயைமனமேயினியிங்குவாமௌனி, திடம்பெறவைத்தமௌனஞ்சகாயந்தெரிந்துகொள்ளே. (௰எ)

நாற்றச்சடலத்தையொன்பதுவாசலுடைமனையைச், சோற்றுப் பசையினை மும்மலபாண்டத் தொடக்கறையை, யாற்றுப்பெருக் கன்னகன்மப்பெருக்கையடர்கிருமிச், சேற்றைத்துணையென்றநாய்க்குமுண்டோகதிசேர்வதுவே. (௰அ)

பொய்யாருலகநிலையல்லகானற்புனலெனவே
மெய்யாவறிந்தென்னவென்றுவிதனைவிடப்படுமோ
கையான்மௌனந்தெரித்தேகல்லானிழற்கண்ணிருந்த
வையாவப்பாவென்னரசேமுக்கண்ணுடையாரமுதே ()

ஆராவமுதெனமோனம்வகித்துக்கல்லாலினிழற்கீழ்ப்
பேராதுநால்வருடன்வாழ்முக்கண்ணுடைப்பேரரசே
நீராயுருகவுள்ளன்புதந்தேசுகநிட்டையைநீ
தாராவிடினென்பெருமூச்சுத்தானத்தனஞ்சயனே. ( )

வாயுண்டுவாழ்த்தமௌனஞ்செய்போதுமௌனவுருட், டாயுண்டுசேயென்னவென்னைப்புரக்கச்சதானந்தமா, நீயுண்டுநின்னைச்சரண்புகநானுண்டென் னெஞ்சமையா, தீயுண்டிருந்தமெழுகலவோகதிசேர்வதற்கே.( )

கல்லாலெதிர்ந்துங்கைவில்லாலடித்துங்கனிமதுரச்
சொல்லாற்றுதித்துநற்பச்சிலைதூவியுந்தொண்டரினை
மெல்லாம்பிழைத்த னரன்பற்றநானினியேதுசெய்வே
ன், கொல்லாவிரதியர்நேர்நின்றமுக்கட்குருமணியே.( )

முன்னிலைச்சுட்டொழிநெஞ்சேநின்போதமுனைக்கிலையோ, பின்னிலைச்சன்மம்பிறக்குங்கண்டாயிந்தப்பேய்த்தனமேன், றன்னிலையேநில்லுதானேதனிச்சச்சிதானந்தமா, நன்னிலைவாய்க்குமெண்சித்தியுங் காணுநமதல்லவே. (௨௩)

சொல்லான்மௌனமௌனமென்றேசொல்லிச்சொல்லிக்கொண்ட, தல்லான்மனமறப் பூரணநிட்டையிலாழ்ந்ததுண்டோ, கல்லாதமூடனினியென்செய்வேன்சகற்காரணமாம், வல்லாளனைமௌனசதானந்தமாகடலே. (௨௪)

ஆரணமாகமமெல்லாமுரைத்தவருண்மௌன
காரணமூலங்கல்லாலடிக்கேயுண்டுகாணப்பெற்றுற்

பாரணங்கோடுசுழ்னெஞ்சமாகியபாதரச
மாரணமாய்விடுமென்சித்திமுத்தியும்வாய்த்திடுமே. ()

சித்தமவுனிவடபான்மவுனிநந்திபகுண்ட
சுத்தமவுனியெனுமூவருக்குந்தொழும்புசெய்து
சுத்தமவுனமுதன்மூன்றுமௌனமுந்தான்படைத்தே
நித்தமவுனமல்லாலறியேன்மற்றைநிட்டைகளே. ()

கண்டேனினதருளவ்வருளாய்நின்றுகாண்பதெல்லா
முண்டேயதுவுமினதாக்கினேனுவட்டாதவின்ப [க்
மொண்டேயருந்தியிளைப்பாறினேனல்லமுத்திபெற்று
கொண்டேன்பராபரமேயெனக்கேதுங்குறைவில்லையே

மேற்கொண்டவாயுவுங்கீழ்ப்படமூலத்துவெந்தழலைச்
சூற்கொண்டமேகமெனவூமைநின்றுசொரிவதையென்
முற்கண்டதன்றுமௌனோபதேசியளிக்கையினிப்
பாற்கண்டுகொண்டனன்மேலையமிர்தம்பருகுவனே.()

சொல்லாற்றொடர்பொருளாற்றொடராப்பரஞ்சோதிநின்னை, நல்லாளர்கண்டவழிகண்டிலேன்சகமார்க்கத்திலுஞ், செல்லாதென்சிந்தைநடுவேகிடந்து திகைத்துவிம்மி, யல்லானதும்பகலானதும்வாய்விட்டரற்றுவனே. (உக)

அறியாதவென்னையறிவாயுநீயென்றகம்புறமும்
பிறியாதறிவித்தபேரறிவாஞ்சுத்தபேரொளியோ
குறியாதவானந்தக்கோவாவமுதருள்குண்டலியோ
சிறியேன்படுந்துயர்கண்டுகல்லானிழற்சேர்ந்ததுவே.()

எல்லாமுதவுமுனையொன்றிற்பாவனையேனுஞ்செய்யா
புல்லாயினுமொருபச்சிலையாயினும்போட்டிறைஞ்சி
நில்லேனல்யோகநெறியுஞ்செயேனருணீதியொன்றுங்
கல்லேனெவ்வாறுபரமேபரகதிகாண்பதுவே. (௩௧)

ஒன்றுந்தெரிந்திடவில்லையென்றுள்ளத்தொருவவெ
னக், கென்றுந்தெரிந்த விவையவைகேளிரவும்பகலுங்
குன்றுங்குழியும்வனமுமலையுங்குகைகடலு
மன்றுமனையுமனமாதிதத்துவமாயையுமே. (௩௨)

பழுதுண்டுபாவையர்மோகவிகாரப்பரவையிடை
விழுகின்றபாவிக்குந்தன்றாட்புணையைவியந்தளித்தான்
றெழுகின்றவன்பருளாங்கவிகூறத்துலங்குமன்று
னெழுகின்றவானந்தக்கூத்தனென்கண்மணியென்னப்
பனே. (௩௩)

அழுக்கார்ந்தநெஞ்சுடையேனுக்கையாநின்னருள்வா
ழுங்கி, னிழுக்காகுமென்றெண்ணியோவிரங்காதவியல்
புகண்டாய், முழுக்காதலாகி விழிநீர்பெருக்கியழுக்கு
றொனுங், குழுக்காணநின்றுநடமாடுந்தில்லைக்கொழுஞ்சு
டரே. (௩௪)

ஆலம்படைத்தவிழியார்கண்மால்கொண்டவர்செயி
ந்தா, சாலம்படைத்துத்தளர்ந்தனையேயென்றுந்தன்
னருள்கூர், கோலம்படைத்துக்கல்லாலடிக்கீழ்வைகுறுங்
கோவுக்கன்பாங், காலப்படைக்கந்தவம்படையாதென்
கொல்கன்னெஞ்சமே. (௩௫)

சும்மாவிருக்கச்சுகஞ்சுகமென்றுசுருதியெல்லா
மம்மாநிரந்தரஞ்சொல்லவுங்கேட்டுமறிவின்றியே
யெம்மான்மௌனி மொழியையுந்தப்பி யென்பேதை
மையால், வெம்மாயக்காட்டிலலைந்தேனந்தோவென்வி
திவசமே. (௫௬)

இனமேசெலச்செலவாழ்நாளுநீங்கச்செகத்திருள்
சொற், பனமேயெனவெளிகண்டேயிருக்கவும்பாசபந்
த, வினமேதுணையென்றிருந்தேனமன்வரினென்செய்
குவோ, மனமேநம்போலவுண்டோசுத்தமூடரிவ்வைய
கத்தே. (௫௭)

கடலைத்தைமலையெத்தையத்தைசன்மமதற்
முடலைத்தையத்தைகடலுண்மனமொலாக்குமித்தச்
சடலத்தைநான்விழுமுன்னேயுனைவந்துசாரவிருட்
படலத்தைமாற்றப்படாதோநிறைந்தபராபரமே. (௫௮)

நினையுநினைவுநினையன்றியில்லைநினைத்திடுங்கால்
வினையென்றொருமுதனின்னையல்லாது விளைவதுண்
டோ, தனையுந்தெளிந்துன்னைச் சார்ந்தோர்களுள்ளச்
செந்தாமரையா,மனையும்பொன்மன்றமுநின்றுடுஞ்சோ
திமணிவிளக்கே. (௫௯)

உள்ளத்தையுமிங்கெனையுநின்கையினிலொப்புவித்து
ம், கள்ளத்தைச்செய்யும்வினையால்வருந்தக்கணக்குமு
ண்டோ, பள்ளத்தில்வீழும்புனல்போற்படிந்துன்பரம
வின்ப, வெள்ளத்தினின்முழ்கினர்க்கேயெளிதாந்தில்லை
வித்தகனே. (௬௰)

கள்ளம்பொருந்துமட நெஞ்சமேகொடுங்காலர்வந்தா
லுள்ளன்பவர்கட்குண்டோவில்லையேயுலகின்றவனை,
வள்ளம்பொருந்துமலரடிகாணமன்றுமின்ப [யே.
வெள்ளச்செம்பாதப் புணையேயல்லாற்கதி வேறில்லை

தன்மயமானசுபாவத்தின்மெள்ளத்தலைப்படுங்கான்
மின்மயமானசகம்யாதுளைத்தென்வெளியிலுய்த்த
சின்மயமுத்திரைக் கையேமெய்யாகத் தெளிந்தநெஞ்
சே, நின்மயமென்மயமெல்லாநிறைந்தநிராமயமே. ()

ஆயுங்கலையுஞ்சுருதியுங்காண்டற்கரியவுனைத்
தோயும்படிக்குக்கருணைசெய்வாய்சுகவான்பொருளே
தாயும்பிதாவுந்தமருங்குருவுந்தனிமுதலு
நீயும்பரையுமென்றேயுணர்ந்தேனிதுநிச்சயமே. (௪௩)

அல்லும்பகலுமுனக்கேயபயமபயமென்று
சொல்லுஞ்சொலின்னந்தெரிந்ததன்றேதுதிப்பார்கண்
மனக், கல்லுங்கரைக்கு மௌனவுனது கருணையென்
பாற், செல்லும்பொழுதல்லவோசெல்லுவேனந்தசிற்சு
கத்தே. (௪௪)

எல்லாஞ்சிவன்செயலென்றறிந்தாலவனின்னருளே
யல்லாற்புகலிடம்வேறுமுண்டோவதுவேநிலையா
நில்லாயுன்றுற்றமியேற்குக்கதியுண்டிந்நீணிலத்திற்
பொல்லாமயக்கத்திலாழ்ந்தாவதென்னபுகனெஞ்சமே.

ஒளியேயொளியிலுணர்வேயுணர்விலுவகைபொங்குங்
களியேகளிக்குங் கருத்தேகருத்தைக் கவளங்கொண்ட

வெளியேவெளியின் விளைசுகமேசுகர் வீறுகண்டுந்
தெளியேன்றெளிந்த வரைப்போற்றிடேனென்னசெய்
குவனே. (சுசு)

மறக்கின்றதன்மையிறத்தலொப்பாகுமனமதொன்
றிற், பிறக்கின்றதன்மைபிறத்தலொப்பாகுமிப்பேய்ப்
பிறவி, யிறக்கின்றவெல்லைக்களவில்லையேயிந்தச்சன்ம
வல்ல, றுறக்கின்றநாளெந்தநாள்பரமேநின்றுரும்ப
ஞக்கே. (சு௭)

காட்டியவந்தக்கரணமுமாயையிக்காயமென்று
சூட்டியகோலமுநானுவியங்கத்துறையிதனு
ளூட்டியநான்றனக்கென்றேரறிவற்றநானிவற்றைக்
கூட்டிநின்ருட்டினையேயபரமேநல்லகூத்திதுவே. (சுஅ)

பொல்லாதமாமர்க்கடமனமேயெனைப்போலடுத்த,
வெல்லாற்றையும்பற்றிக்கொண்டனையே யென்னைநின்
மயமா, நில்லாயருள்வெளிநீநானிற்பேனருணிட்டை
யொரு, சொல்லாற்பதிந்துபரிபூரணந்தந்தோய்குவ
னே.

வாராய்நெஞ்சேயுன்றன் றன்மார்க்கம்யாவையும்
வைத்துக்கட்டிநீ, காராயடிக்கடிசுற்றுகின்ருயுன்னவ
லமறிக், கோராயிரம்புத்திசொன்னலுமோர்கிலையோ
கெடுவாய், பாராயுனைக்கொல்லுவேன்வெல்லுவேன'று
ட்பாங்குகொண்டே. (ருய)

மாதத்திலேயொருதிங்களுண்டாகிமடிவதைநின்
போதத்திலேசற்றும் வைத்திலையேவெறும் புன்மைநெ

ஞ்சே, வேதத்திலேதர்க்கவாதத்திலேவிளங்காதுவிந்து
நாதத்திலேயடங்காதந்தவான்பொருளுடிக்கொள்ளே.

எங்கும்வியாபித்துணர்வாயுனக்கென்னிதயத்துளே
தங்குந்துயரந்தெரியாதவண்ணந்தடைசெய்ததா
ரங்கங்குழைந்துள்ளுருகுமன்பாளர்க்கணைகடந்து
பொங்குங்கருணைக்கடலேசம்பூரணபோதத்தனே. ( )

வையகமாதர்சுகத்தையும்பொன்னையுமாயமலை [யு
மெய்யையுமெய்யென்று நின்னடியார்தம்விவேகத்தை
மையமில்வீட்டையுமெய்ந்நூலையும் பொய்யதாகவெ
ண்ணும்; பொய்யர்தந்நட்பைவிடுவதென்றோபரிபூரண
மே. (௫௨)

அளியுங்கனியொத்தருவினையாளுந்துயர்வுறுவேன்
றெளியும்படிக்கிப்பரிபாககாலமுஞ்சித்திக்குமோ
வொளியுங்கருணையுமாகுநின்பழமோருருவாய்
வெளிவந்தடியர்களிக்கநின்றும்விழுப்பொருளே. ( )

அடையார்புரஞ்செற்றதேவேநின்பொன்னடிக்கன்பு
சற்றும், படையாதவென்னைப்படைத்திந்தப்பாரிற்பட
ர்ந்தவினைத், தடையாற்றலையிட்டுநெஞ்சம்புண்ணாகத்
தளரவைத்தா, யுடையாயுடையபடியன்றியான்செய்த
தொன்றிலையே. (௫௩)

ஆடுங்கறங்குந்திரிகையும்போலவலைந்தலைந்து
காடுங்கரையுந்திரிவதல்லாநின்கருணைவந்து
கூடும்படிக்குத்தவமுயலாதகொடியனொமன்
றேடும்பொழுதென்னசெய்வார்பரானந்தசிற்சுடரே. ( )

கற்றும்பலபலகேள்விகள்கேட்டுங்கறங்கெனவே
சுற்றுந்தொழில்கற்றுச் சிற்றின்பத்தூடுசுழலினென்று
ங்,குற்றங்குறைந்துகுணமேலிடுமன்பர்கூட்டத்தையே
முற்றுந்துணையெனநம்புகண்டாய்சுத்தமூடநெஞ்சே ()

நீயெனநானெனவேறில்லையென்றுநினைவருளத்
தாயெனமோனகுருவாகிவந்துதடுத்தடிமைச்
சேயெனக்காத்தனையேபரமேநின்றிருவருளுக்
கேயென்னசெய்யுங்கைம்மாறுளதோசுத்தவேழையனே

ஆத்திரம்வந்தவர்போலலையாமலரோகவுட [திம்
காத்திரந்தந்தென்னையே யன்னைபோலுங்கருணைவை:த்
மாத்திரமுன்னின்றுணர்த்தினையேமௌனுயினிநான்
சாத்திரஞ்சொன்னபடியியமாதியுஞ்சாதிப்பனே.(ருக)

---

## உடல்பொய்யுறவு.

உடல்பொய்யுறவாயினுண்மையுறவாகக்
கடவாரார்தண்ணருளேகண்டாய் - திடமுடனே
யுற்றுப்பார்மோனவொருசொல்லேயுண்மைநன்றுப்
பற்றிப்பார்மற்றவெல்லாம்பாழ். (க)

பாராதிபூதமெல்லாம்பார்க்குங்காலப்பரத்தின்
சீராகநிற்குந்திறங்கண்டாய் - நேராக
நிற்குந்திருவருளினெஞ்சேயாநிற்பதல்லாற்
கற்குநெறியாதினிமேற்காண். (உ)

மாயாசகத்தைமதியாதார்மண்முதலா
யேயானதத்துவத்திலெய்துவரோ - நேயானு
பூதியிலே நிற்கப்பொருந்துவர்களன்னவர்த
நீதியையேயோர்மனமேநீ. (௯)

இகமுழுதும்பொய்யெனவே யேய்ந்துணர்ந்தாலாங்கே
மிகவளரவந்தவருண்மெய்யே - யகநெகிழப்
பாரீரொருசொற்படியேயனுபவத்தைச்
சேரீரதுவேதிறம். (க0)

ஆரணங்களாகமங்களியாவுமேயானந்த
பூரணமேயுண்மைப்பொருளென்னுங்-காரணத்தை [ப்
யோராயோவுள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ்வுண்மையினை
பாராயோநெஞ்சேபகர். (கக)

நேராயம்மௌனநிலைநில்லாமல்வாய்பேசி
யாராயலைந்தீர்நீராகெடுவீர் - தேரீர்
திரையுந்திரையுநதிசென்னியனைநாவாற்
கரையுங்கரையுமனக்கல். (கஉ)

அற்பமனமேயகிலவாழ்வத்தனையுஞ்
சொற்பனங்கண்டாயுண்மைசொன்னேனுன் - கற்பனை
றில்லாவிடத்தேயெனைச்சும்மாவைத்திருக்கக் [பொன்
கல்லாய்நீதானோர்கவி. (கங)

எங்குந்திருவருளினிச்சையாமென்றெனறப்
போதும்பொருந்தும்புனிதர்பாற் - றீதுநெறி
செல்லுமோசெல்லாதேசெல்லுமிடமின்பமலாற்
சொல்லுமோவேதத்தொனி. (கச)

கல்லேறுஞ்சில்லேறுங்கட்டியேறும்போலச்
சொல்லேறப்பாழ்த்ததுளைச்செவிகொண் - டல்லேறு
நெஞ்சனெனநிற்கவைத்தாய்நீதியோதற்பரமே
வஞ்சனல்லேனீயேமதி. (௧௫)

அப்பொருளுமான்மாவுமாரணநூல்சொன்னபடி
தப்பிலாச்சித்தொன்றுஞ்சாதியினா - லெப்படியுந்
தேறிற்றுவிதஞ்சிவாகமமேசொல்லுநிட்டை
யாருமிடத்தத்துவிதமாம். (௧௬)

வேதமுதலாய்விளங்குஞ்சிவவடிவாம்
போதநிலையிற்பொருந்தாம - லேதமிகு
மோகாதியல்லலிலேமூழ்கினையேநெஞ்சேயித்
தேகாதிமெய்யோதெளி. (௧௭)

நோக்கற்கரிதானநுண்ணியவான்மோனநிலை
தாக்கற்குபாயஞ்சமைத்தபிரான் - காக்குமுயி
ரத்தனைக்குநானடிமையாதலினால்யானெனதென்
றித்தனைக்கும்பேசவிடமில். (௧௮)

ஒன்றுமறநில்லென்றுணர்த்தியநம்மோனகுரு
தன்றுணைத்தாணீடூழிதாம்வாழ்க - வென்றென்றே
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்
கே, கைக்குவருமின்பக்கனி. (௧௯)

மனத்தாலும்வாக்காலுமன்னவொண்ணுமோன
வினத்தாரோநல்லவினத்தார் - கனத்தபுகழ்
கொண்டவருமன்னவரோகூறரியமுத்திநெறி
கண்டவருமன்னவரோகாண். (௨௦)

கண்ணொளியேமோனக்கரும்பேகவலையறப்
பண்ணொளிக்குமுள்ளொளியாம்பான்மையினை - நண்
சித்தமிரங்கிலதென்சித்தந்தெளியாவே [ணிடவுன்
றித்தனைக்குமாதரவுமில். (உக)

அறியாமைசாரினதுவாயறிவா
நெறியானபோததுவாய்நிற்கும் - குறியாற்
சதசத்தருளுணர்த்தத்தானுணராநின்ற
விதமுற்றறிவெனும்பேர்மெய். (உஉ)

குருலிங்கசங்கமமாக்கொண்டதிருமேனி
கருவொன்றுமேனிநம்பாற்காட்டா - தருவென்று
கண்டவர்க்கேயானந்தங்கண்டுகொளலாமலது
கொண்டவர்க்கிங்கென்னகிடைக்கும். (உங)

புலியினதளுடையான்பூதப்படையான்
பலியிரந்துமெல்லாம்பரிப்பான் - மலிபுனல்சேர்
பொன்முடியான்முக்கட்புனிதன்சரண்புகுந்தோர்க்
கென்முடியாதேதுமுளதே. (உச)

சொல்லுக்கடங்காச்சுகப்பொருளைநாமெனவே
யல்லும்பகலுமாற்றுவதென் - னல்லசிவ
ஞானமயம்பெற்றோர்களுமில்லையென்பரந்தோ
மோனமயமானமுறை. (உரு)

ஐயாவருணகிரியப்பாவுனைப்போல
மெய்யாகவோர்சொல்விளம்பினரியார் - வையகத்தோர்
சாற்றறிஞன்றேசற்றோர்தன்னையாய்முக்கணெந்தை
நாற்றிசைக்குங்கைகாட்டினான். (உசு)

காதற்றுப்போனமுறிகட்டிவைத்தாலாவதுண்டோ
தீதற்றகாயமுமச்செய்கையே - போதமாய்
நிற்பரல்லாலிச்சகத்தினோரார்கணேரிடினுந்
தற்பரமாக்கண்டிருப்பார்தாம். (உஎ)

வெள்ளங்குலாவுசடைவெள்ளக்கருணையினன்
கள்ளங்குலாவுவஞ்சக்கள்ளனே - னுள்ளத்தி
லில்லனென்றாலன்னவன்றானெங்கும்வியாபகத்தா
னல்லனென்றுஞ்சொல்லவழக்காம். (உஅ)

தத்துவப்பேயோடேதலையடித்துக்கொள்ளாமல்
வைத்தவனாண்மௌனவள்ளலையே - நித்தமன்பு
பூணக்கருதுநெஞ்சுபோற்றக்கரமெழும்புங்
காணத்துடிக்குமிருகண். (உகூ)

தொல்லைவினைக்கீடாய்ச்சுழல்கின்றநாளொருவ
னெல்லையிலாநின்கருணையெய்துவனோ - வல்லவனோ
மோனகுருவேமுழுதினையுந்தானுணர்ந்த
ஞானகுருவேநவில். (௩0)

மூன்றுகண்ணாமுத்தொழிலாமுழுமுதலாமூவுலகுந்
தோன்றக்கருணைபொழிதோன்றலே - யீன்றவனைத்
தன்னைப்போலன்புதழைத்தோயொருதெய்வ
முன்னைப்போலுண்டோவுரை. (௩க)

நேசிக்குஞ்சிந்தைநினைவுக்குளுன்னைவைத்துப்
பூசிக்குந்தாவிறந்தபூரணமா - யோசித்து
நின்றதல்லான்மோனநிருவிகற்பநிட்டைநிலை
யென்றுவருமோவடியேனே. (௩உ)

அறிவிலறியாமையற்றறிவாய்நின்று
பிறிவறவானந்தமயம்பெற்றுக் - குறியவிழ்ந்தா
லன்றைக்குடல்வேண்டேனையாவிவ்வாக்கையையே
யென்றைக்கும்வேண்டுவேனையான். (ங௩)

உடலைப்பழித்திங்குணவுங்கொடாமல்
விடவிடவேநாடுவரோமெய்யைப் - படபடென
வேண்டுவேனிந்தவுடன்மெய்யுணராப்பொய்யனு
னுண்டநீதானேயறி. (ஙச)

அறியாயோவென்னையுநீயாண்டநீசுத்த
வெறியாய்மயங்கவுமேன்விட்டாய் - நெறிமயங்கிக்
குன்றுஞ்செடியுங்குறுகுமோவையாவே
கன்றுகெட்டாற்றுயருகேகாண். (ஙரு)

ஏதுக்குடற்சுமைகொண்டேனிருந்தேனையனே
யாதிக்கமோனவருட்டாயே - சோதியா
மன்னநிருவிகற்பவானந்தநிட்டையிலே
பின்னமறநில்லாதபின். (ஙசா)

பின்னுமுடற்சுமையாப்பேசும்வழக்கதனு
லென்னபலனுமுற்றிருந்தோமே - யன்னதனு
லானந்தந்தானேதானுகுமெம்மையனே
யேனிந்தத்துன்பமினி. (ஙஎ)

துன்பக்கடலிற்றுளைந்ததெல்லாந்தீர்ந்ததே
யின்பக்கடலிலிருமென்ன - வன்பிற்
கரைந்துகரைந்துருகிக்கண்ணருவிகாட்ட
விரைந்துவருமானந்தமே. (ஙஅ)

கரைந்துகரைந்துருகிக்கண்ணீராறாக
விரைந்தேநிருவிகற்பமெய்த - நிரந்தரமு
நின்னையேசிந்திக்கநீகொடுத்தாய்மோனநா
னென்னைமுழுதுங்கொடுத்தேனே. (௩௯)

அல்லும்பகலும்பேரன்புடனேதானிருந்தாற்
கல்லுமுருகாதோகன்னெஞ்சே - பொல்லாத
தப்புவழியேனினைந்தாய்சந்ததமுநீயிறந்த
வெப்பிலேயானந்தமே. (௪0)

கொடுத்தேனேயென்னைக்கொடுத்தவுடனின்ப
மடுத்தேனேநீடூழிவாழ்ந்தே - யடுத்தேனே
பெற்றேனேபெற்றுப்பிழைத்தேனேசனனமவல்ல
லிற்றேனேயேழையடியேன். (௪௧)

பெற்றோம்பிறவாமைபேசாமையாயிருக்க
கற்றோமெனவுரைக்கக்காரியமேன் - சற்றேனு
நீக்கற்றவின்பநிலைபொருந்தியேசற்று
வாக்கற்றாற்பேசுமோவாய். (௪௨)

காலன்றனையுதைத்தான்காமன்றனையெரித்தான்
பாலன்பசிக்கிரங்கப்பாற்கடலை - ஞாலமெச்சப்
பின்னேநடக்கவிட்டான்பேரருளைநாடாதார்க்
கென்னேநடக்கையினி. (௪௩)

விண்ணருவிமேன்மேல்விளங்குவபோலேயிரண்டு
கண்ணருவிவெள்ளமொடுகைகூப்பித் - தண்ணமிர்த
வெள்ளமேயானந்தவெற்பேயெனத்தொழுவோ
ருள்ளமேஞானவொளி. (௪௪)

பிள்ளைமதிச்செஞ்சடையான்பேசாப்பெருமையினான்
கள்ளவிழும்பூங்கொன்றைக்கண்ணியா - னுள்ளபடி
கல்லாலின்கீழிருந்துகற்பித்தானோர்வசன
மெல்லாருமீடேறவே. (சரு)

புலனைந்துந்தானேபொரமயங்கிச்சிந்தை
யலமந்துழலுமடிமை - நலமிகுந்த
சித்தானமோனசிவனேநின்சேவடிக்கே
பித்தானுமுண்டோபிறப்பு. (சசு)

நிறைகுடந்தானீர்கொளுமோநிச்சயமாமோன
முறையுணர்ந்தார்யாதைமுயல்வார் - பிறையணிந்த
மிக்ககைலாயமலைவித்தகனேவேதியனே
செக்கரணிமேனியனேசெப்பு. (சஎ)

துங்கமழுமானுடையாய்சூலப்படையுடையாய் [ரு
திங்களணிசெஞ்சடையாய்சேவுடையாய்-மங்கையொ
பாலுடையாய்செங்கட் பணியாயென்சென்னியின்மே
ற், காலுடையாய்நீயேகதி. (சஅ)

இனியகருணைமுகிலெம்பிரான்முக்கட்
கனியமிர்தவாரியின்பக்கட்டி - தனிமுதல்வ
னித்தன்பரமனிமலனிறைவாய்நிறைந்த
சுத்தனமக்கென்றுந்துணை. (சகூ)

நீதியாய்க்கல்லாலினீழலின்கீழேயிருந்து
போதியாவுண்மையெல்லாம்போதித்தா - னேதில்
சனகாதியாயதவத்தோர்க்குஞான
தினகரனாமௌனசிவன். (ருo)

தேகச்செயருனுஞ்சிந்தையுடனேகுழையில்
யோகநிலைஞானிகளுக்கொப்புவதோ - மோகநிலை
யல்லலிலேவாழ்வாரோவப்பனேநீயற்ற
வெல்லையிலேசும்மாவிரு. (ருக)

சும்மாவிருக்கச்சுகமுதயமாகுமே
யிம்மாயாயோகமினியேனடா - தம்மறிவின்
சுட்டாலேயாகுமோசொல்லவேண்டாங்கன்ம
நிட்டாசிறுபிள்ளாய்நீ. (ருஉ)

நீயற்றவந்நிலையேநிட்டையதினீயிலையோ
வாயற்றவனேமயங்காதே - போயற்
றிருந்தாலுநீபோகாயென்றுமுள்ளாய்சும்மா
வருந்தாதேயின்பமுண்டுவா. (ருங)

வாவாவென்றின்பம்வரவழைக்குங்கண்ணீரோ
டாவாவென்றேயழுதவப்பனே - நீவாடா
வெல்லாநமக்கெனவேயீந்தனையேயீந்தபடி
நில்லாயதுவேநிலை. (ருச)

நில்லாப்பொருளைநினையாதேநின்னையுள்ளோர்
சொல்லாப்பொருட்டிரளைச்சொல்லாதே - கல்லாத
சிந்தைகுழைந்துசுகஞ்சேரக்குருவருளால்
வந்தவழிநல்லவழி. (ருரு)

வழியிதென்றுமல்லாவழியிதென்றுஞ்சொல்லிற்
பழிபழியாநல்லருளாற்பார்த்தோர் - மொழியுனக்கே
யேற்றிருக்கச் சொன்னவன்றே யெங்கும் பெருவெளி
யாம், பார்த்தவிடமெல்லாநீபார். (ருசா)

பாரனைத்தும்பொய்யெனவே பட்டினத்துப்பிள்ளையை
லாருந்துறக்கையரிதரிது - நேரே [ப்போ
மனத்துறவுமப்படியேமாணாவிவற்றி
னுனக்கிசைந்தவாறொன்றேயோர். (ருஎ)

ஓராமலேயொருகாலுன்னாமலுள்ளொளியைப்
பாராமலுள்ளபடிபார்த்திருந்தால் - வாராதோ
பத்துத்திசையும்பரந்தெழுந்தானந்தவெள்ளந்
தத்திக்கரைபுரண்டுதான். (ருஅ)

தானானதன்மைவந்துதாக்கினாலவ்விடத்தே
வானாதிமாயைவழங்காதோ - ஞானாகே
னான்னுள்ளேதோன்றுவுறவாகின்றதென
வென்னுள்ளேயென்றுமிரு. (ருகூ)

என்னையுன்னையின்னதிதுவென்னாமனிற்குநிலை
தன்னையருளென்றதருணத்தி - லன்னைபெற்ற
பிள்ளைக்குஞ்சொல்லாதபெற்றிகண்டாயையனே
யுள்ளத்தினுள்ளேயுணர். (சு0)

சொன்னவர்தாநிட்டைதொகுத்திராநிட்டையிலே
மன்னினவர்போதியார்மாமௌனன் - றன்னுள்
விருப்பாகக்கைகாட்டிமிக்கவடநீழ
லிருப்பானிருவிகற்பத்தே. (சுக)

இந்தநிருவிகற்பத்தெந்தையிருக்கநிட்டை
சிந்தைநீதேறாய்செகமனைத்தும் - வந்ததொடர்ப்
பாடுகெடவன்றோவோர்பாத்திரத்துக்காடலல்லா
லாடுவதேனாட்டுமவன். (சுஉ)

அவனேபரமும்வனேகுருவு
மவனேயகிலமனைத்து-மவனேதா
மானவரோசொன்றலவோகுருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்தநாள். (கா௩)

நாளவங்கள்போகாமனோடோறுநந்தமையே
யாளவந்தார்தாளின்கிழாட்புகுந்தாய்-மீளவுனைக்
காட்டாமனிற்குங்கருத்தறிந்தானெஞ்சேயுன்
றாட்டாறனையமில்லையால். (கா௪)

யான்றென்னலறவேயின்பநிட்டையென்றருளைக்
கோன்றனுரைத்தமொழிகொள்ளாயோ-தோன்றி
யிழுக்கடித்தாய்நெஞ்சேநீயென்கலைகள்சோர
வழுக்கடிக்கும்வண்ணார்போலாய். (கா௫)

எங்குஞ்சிவமேயிரண்டற்றுநிற்கினெஞ்சே
தங்குஞ்சுகநீசலியாதே-யங்கிங்கென்
றெண்ணாதேபாழிலிறந்துபிறந்துழலப்
பண்ணாதேயானுன்பரம். (கா௬)

மெய்மையைப்பொய்யென்றிடவுமெய்யனையாப்பொய்ந்
நெஞ்சே, பொய்மையைத்தான்மெய்யெனவும்போகுமோ-
வையமறத், தன்மயத்தைமெய்யனவே சார்ந்தனையே
லானந்த, மென்மயமுநின்மயமுமே. (கா௭)

பூங்காவனநிழலும்புத்தமுதுஞ்சாந்தபதம்
வாங்காதவானந்தமாமழையு - நீங்காவாஞ்
சொல்லிறந்துமாண்டவர்போற்றுமௌனபூமியிற
னில்லையெனநின்றவிடம். (கா௮)

இடம்வானநல்லபொருளின்பமெனக்கேவ
லடங்காக்கருவியனைத்து-முடனுதவ
மந்தாரதாருவெனவந்தமவுனகுரு
தந்தானோர்சொற்கொண்டுதான். (௬௯)

தானந்தவஞானஞ்சாற்றரியசித்திமுத்தி
யானவையெல்லாந்தாமேயாகும்-மோனகுரு
சொன்னவொருசொல்லாற்சுகமாயிருமனமே
யின்னமயக்கமுனக்கேன். (௭௦)

உன்னையுடலையுறுபொருளைத்தாவெனவே
யென்னையடிமைக்கிருத்தினான்-சொன்னவொரு
சொல்லைமறவாமற்றேர்ந்தானெஞ்சேயுன்னா
லில்லைபிறப்பதெனக்கே. (௭௧)

எனக்குமுனக்குமுறவில்லையெனத்தேர்ந்து
நினைக்கவரிதானவின்பநிட்டை-தனைக்கொடுத்தே
யாசான்மவுனியளித்தானெஞ்சேயுனையோர்
காசாமதியேனான்காண். (௭௨)

ஆனந்தமோனகுருவாமெனவேயென்னறிவின்
மோனந்தனக்கிசையமுற்றியதாற் - றேனுந்து
சொல்லெல்லாமோனந்தொழிலாதியுமோன
மெல்லாநன்மோனவடிவே. (௭௩)

எல்லாமேமோனநிறைவெய்துதலாலெவ்விடத்து
நல்லார்கண்மோனநிலைநாடினார் - பொல்லாத
நானெனவிங்கொன்றைநடுவேமுளைக்கவிட்டிங்
கேனலைந்தேன்மோனகுருவே. (௭௪)

மோனகுருவளித்தமோனமேயானந்த
ஞானவருளுமதுநானுமது-வாஞுறி
நின்றநிலையுமதுநெஞ்சப்பிறப்புமது
வென்றறிந்தேனானந்தமே. (எரு)

அறிந்தவறிவெல்லாமறிவன்றியில்லை
மறிந்தமனமற்றமவுனஞ்-செறிந்திடவே
நாட்டினானந்தநாட்டிற்குடிவாழ்க்கை
கூட்டினன்மோனகுரு. (எசு)

குருவாகித்தண்ணருளைக்கூறுமுன்னேமோன
வுருநீடுயிர்பொருளுமொக்கத்-தருகியென
வாங்கினையேவேறுமுண்மைவைத்திடவுங்கேட்டிடவு
மிங்கொருவருண்டோவினி. (எஎ)

இனியகருப்புவட்டையென்னுவிலிட்டா
னனியிரதமாருநானுந்-தனியிருக்கப்
பெற்றிலேன்மோனம்பிறந்தவன்றேமோனமல்லாற்
கற்றிலேனேதுங்கதி. (எஅ)

ஏதுக்குஞ்சும்மாவிருநீயெனவுரைத்த
சூதுக்கோதோன்றத்துணையாகிப்-போதித்து
நின்றதற்கோவென்னையாநீக்கிப்பிரியாமற்
கொன்றதற்கோபேசாக்குறி. (எகூ)

குறியுங்குணமுமறக்கூடாதகூட்டத்
தறிவறிவாய்நின்றுவிடவாங்கே-பிறிவறவுஞ்
சும்மாவிருத்திசுகங்கொடுத்தமோனநின்பாற்
கைம்மாறுநானெழுதல்காண். (அ௦)

நான்றானெனுமயக்கநண்ணுங்காலென்றனை
வான்றானெனநிறையமாட்டாய்நீ-யூன்றமல்
வைத்துமவுனத்தாலேமாயைமனமிறந்து
துய்த்துவிடுஞானசுகம். (அக)

ஞானநெறிக்கேற்றகுருநண்ணரியசித்திமுத்தி
தானந்தருமந்தமைத்தகுரு-மானமொடு
தாயெனவும்வந்தென்னைத்தந்தகுருவென்சிந்தை
கோயிலெனவாழுங்குரு. (அஉ)

சித்துஞ்சடமுஞ்சிவத்தைவிடவில்லையென்ற
நித்தன்பரமகுருநேசத்தாற்-சுத்தநிலை
பெற்றேமேநெஞ்சேபெரும்பிறவிசாராமற்
கற்றேமேமோனக்கரு. (அங)

---

# ஏசற்றவந்நிலை.

## கொச்சகக்கலிப்பா.

ஏசற்றவந்நிலையேயெந்தைபரிபூரணமாய்
மாசற்றவானந்தவாரிவழங்கிடுமே
பூசற்சுழல்போலுலகநெறிவாதனையாற்
பாசத்துட்செல்லாதேபல்காலும்பாழ்நெஞ்சே. (க)

பாழாகியண்டப்பரப்பையெல்லாம்வாய்மடுத்து
மாழாழியின்பத்தழுந்தப்படியாயோ
தாழாயோவெந்தையருட் டாட்கீழ்நெஞ்சே யெனைப்
வாழாதுவாழ்ந்தழியாவண்ணமிருப்பாயே, [போல்

இருப்பாயிருந்திடப்பேரின்பவெளிக்கேகநமக்குக்
குருப்பார்வையல்லாமற்கூடக்கிடைத்திடுமோ
வருட்பாய்நமக்காகவாளவந்தார்பொன்னடிக்கீழ்
மருட்பேயர்போலிருக்கவாகண்டாய்வஞ்சநெஞ்சே. ()

வஞ்சமோபண்டையுளவாதனையானீயலைந்து
கொஞ்சமுற்றுமுயுனைக்குறைசொல்லவாயுமுண்டோ
வஞ்சலஞ்சலென்றிரங்குமானந்தமாகடற்கீழ்
நெஞ்சமேயென்போலநீயமுழ்ந்தவாராயோ. (ச)

வாராவரவாய்வடநிழற்கீழ்வீற்றிருந்த
பூராயநம்மைப்புலப்படுத்தவேண்டியன்றோ
வோராயோநெஞ்சேயுருகாயோவுற்றிருந்து
பாராயோவவ்வுருவைப்பார்க்கநிறைவாய்விடுமே. (ரு)

வாயாதோவின்பவெள்ளம்வந்தூன்வழியாகப்
பாயாதோவானும்பயிராய்ப்பிழையேனோ
வோயாமலுன்னியுருகுநெஞ்சேயந்நிலைக்கே
தாயானமோனனருள்சந்திக்கவந்திடுமே. (சா)

வந்தவரவைமறந்துலகாய்வாழ்ந்துகன்ம
பந்தமுறவுன்னைப்படிப்பிக்கக்கற்றவர்யா
ரிந்தமதியேனுனக்கிங்கென்மதிகேளொன்றுலே
சந்ததநெஞ்சேபரத்திற்சாரினின்பமுண்டாமே. (எ)

இன்பமயமாயுலகமெல்லாம்பிழைப்பதற்குன்
னன்புநிலையென்பாரதுவுநிலையன்றியுண்டோ
வுன்புலத்தையோரினருட்கொப்பாவாய்நெஞ்சேநீ
தென்புலத்தரோடிருந்துசெய்பூசைகொண்டருளே.

அருளேயோராலயமாவானந்தமாயிருந்த
பொருளோடியானிருக்கப்போயொளித்தநெஞ்சேசஙீ
மருடீர்முயற்கோடோவான்மலரோபேய்த்தேரோ
விருடீரநீயுறைந்ததெவ்விடமோகாணேனே. (௯)

எவ்விடத்தும்பூரணமாமெந்தைபிரான்றண்ணருளே
யவ்விடத்தேயுன்னை நெஞ்சேயாராயிற்கண்டிலனே
யவ்விடத்துமாயையிலேமாண்டனையோவவ்விடமுஞ்
செவ்விடமேநீயுஞ்செனனமற்றுவாழியவே. (௧0)

---

# காடுங்கரையும்.

காடுங்கரையுமனக்குரங்குகால்விட்டோடவதன்பிறகே, யோடுந்தொழிலாற் பயனுளதோவொன்றுய்ப்பல வாயுயிர்க்குயிரா, யாடுங்கருணைப்பரஞ்சோதியருளைப் பெறுதற்கன்புநிலை, தேடும்பருவமிதுகண்டீர்சேரவாருஞ்சகத்தீரே. (௧)

சைவசமயமேசமயஞ் சமயாதீதப்பழம்பொருளைக், கைவந்திடவேமன்றுள்வெளிகாட்டுமிந்தக் கருத்தைவிட்டுப், பொய்வந்துழலுஞ்சமயநெறிபுகுதவேண்டாமுத்திதருந், தெய்வசபையைக்காண்பதற்குச்சேரவாருஞ்சகத்தீரே. (௨)

காசமுறவுகலந்துண்ணக்கண்டாகாரசிவ
போகமெனும்பேரின்பவெள்ளம்பொங்கித்ததும்பிப்பூர
ணமா, யேகவுருவாய்க்கிடைக்குதையோ வின்புற்றிட

நாமினியெடுத்த, தேகம்விழுமுன் புசிப்பதற்குச்சே ஊருஞ்சகத்தீரே. (ரு

# எடுத்ததேகம்.

## கட்டளைக்கலிப்பா.

எடுத்ததேகம்பொருளாவிமூன்றுநீ யெனக்கொன்று ல்லையெனமோனநன்னெறி, கொடுத்தபோதுகொடுத் தன்றேபினுங் குளறினானென்றுகூத்தாடமாயையை விடுத்தவாறுங்கண்ணீரொடுகம்பலை விலகுமாறுமெள் வேட்கைப்ரவாகத்தைத், தடுத்தவாறும்புகலாய்சிரகிரி த் தாயுமானதயாபரமூர்த்தியே. (க)

நோயுவெங்கலிப்பேயுந்தொடரநின் னூலிற்சொன் னமுறையியமாதிநான், றோயும்வண்ணமெனைக்காக்கு ங்காவலுந் தொழும்புகொள்ளுஞ் சுவாமியு நீகண்டாய், போயுஞ்சன்மமினியஞ்சலஞ்சலென் றுலகங்கண்டுதொ ழவொருருவிலே, தாயுந்தந்தையுமாஞேய்சிரகிரித் தா யுமானதயாபரமூர்த்தியே. (உ)

# முகமெலாம்.

முகமெலாங்கணீர்முத்தரும்பிடச்செங்கைமுகிழ்ப்ப வகமெலாங்குழைந்தானந்தமாகநல்லறிஞ ரிகமெலாந்தவமிழைக்கின்ற பொன்செய்கோவேழை சகமெலாம்பெறநல்லருளுதரமாச்சமைந்தோய். (க)

# இடமுறவே.

## கொச்சகக்கலிப்பா.

இடமுறவேநின்னருளைச் சேர்த்தென்னைக்காத்தாள
க், கடனுனக்கென்றெண்ணிநின்னைக்கைகுவித்தோரு
னலரோ, வடைவுகெட்டபாழ்மாயையாழியிலேயின்ன
மல்லற், படமுடியாதென்னுவிப்பற்றேபராபரமே. (க)

ஆராமைகண்டிங்கருட்குருவாய்நீயொருகால்
வாராயோவந்துவருத்தமெல்லாந்தீராயோ
பூராயமாகவருட்பூரணத்திலண்டமுதற்
பாராதிவைத்தபதியேபராபரமே (உ)

வாழாதுவாழவுனைவந்தடைந்தோரெல்லாரு
மாழாழியென்னவருளாறுரைமுக்காற்றே
டேழாயெனவுலகமேசுமினிநானொருவன்
பாழாசாவாறுமுசம்பார்நீபராபரமே. (ங)

உள்ளத்தினுள்ளேயொளித்தென்னையாட்டுகின்ற
கள்ளக்கருணையையான்காணுந்தரமாமோ
வெள்ளத்தைமாற்றிவிடக்குண்பார்நஞ்சூட்டும்
பள்ளத்தின்மீன்போற்பதைத்தேன்பராபரமே. (ச)

வாவிக்கமலமலர்வண்டாய்த்துவண்டுதுவண் [ப்
டாவிக்குணின்றவுனக்கன்புவைத்தார்க்கஞ்சலென்பா
பூவிற்கும்வான்கடையிற்புல்விற்பார்போலவொன்
றைப், பாவிக்கமாட்டேன்பதியேபராபரமே. (ரு)

விண்ணூறுவெற்பின்விழுந்தாங்கெனமார்பிற்
கண்ணூறுபாச்சிடுமென்காதல்வெள்ளங்கண்டிலையோ

தண்ணுறுசாந்தபதத்தற்பரமேநால்வேதப்
பண்ணுறுமின்பப்பதியேபராபரமே. (சு)

கூடியநின்சீரடியார்கூட்டமென்றேவாய்க்குமென
வாடியவென்னெஞ்சமுகவாட்டமுநீகண்டிலையோ
தேடியநின்சீருளைத்திக்கனைத்துங்கைகுவித்துப்
பாடியநான்கண்டாய்பதியேபராபரமே. (எ)

நெஞ்சத்தினூடேநினைவாய்நினைவூடு
மஞ்சலெனவாழுமெனதாவித்துணைநீயே
சஞ்சலமாற்றினையினிமேற்றாய்க்குபசாரம்புகன்று
பஞ்சரிக்கநானார்பதியேபராபரமே. (அ)

புத்திநெறியாகவுனைப்போற்றிப்பலகாலு
முத்திநெறிவேண்டாதமூடனேனுகெடுவேன்
சித்திநெறிக்சென்கடவேன்சீரடியார்க்கேவல்செயும்
பத்திநெறிக்கேனுமுகம்பார்நீபராபரமே. (க)

கண்டறியேன்கேட்டறியேன்காட்டுநினையேயிதயங்
கொண்டறியேன்முத்திகுறிக்குந்தரமுமுண்டோ
தொண்டறியாப்பேதைமையேன் சொல்லெனின்றேன்
மையெல்லாம்,பண்டறிவாய்நீயேபசராய்பராபரமே.(கo)

## தன்னை.

### கொச்சகக்கலிப்பா.

தன்னையறியத்தனதருளாற்றுனுணர்த்து
மன்னைப்பொருளெனவேவாழாமற்பாழ்நெஞ்சே
பொன்னைப்புவிமையமடப்பூவையைமெய்யெனவே
யென்னைக்கவர்ந்திழுத்திட்டென்னபலன்கண்டாயே()

---

## ஆக்குவை.

ஆக்குவைமாயையாவுநொடிதனிலதனைமாள
நீக்குவைநீக்கமில்லாநினைப்பொடுமறப்புமாற்றிப்
போக்கொடுவரவுமின்றிப்புனிதநல்லருளானந்தந்
தாக்கவுஞ்செய்வாயன்றேசச்சிதானந்தவாழ்வே. (க)

---

## கற்புறுசிந்தை.

கற்புறுசிந்தைமாதர்கணவனையன்றிவேறு
ரிற்புறத்தவரைநாடார்யாங்களுமின்பவாழ்வுந்
தற்பொறியாகநல்குந்தலைவநின்னலதோர்தெய்வம்
பொற்புறக்கருதோங்கண்டாய்பூரணானந்தவாழ்வே. ()

முருந்திளநகையார்பாரமுலைமுகந்தழுவிச்செவ்வாய்
விருந்தமிர்தெனவருந்திவெறியாட்டுக்காளாய்நாளு
மிருந்தலோகாயதப்பேரினத்தனுயிருந்தவேழை
பொருந்தவுங்கதிமேலுண்டோபூரணானந்தவாழ்வே. ()

தீதெலாமொன்றும்வன்மை செறிந்திருட்படலம்போர்
பாதகசிந்தைபெற்றபாதகனுன்பாதநீழ [த்த

லாதரவடையவுள்ளன்பருள்கிலையாயின்மற்றியார்
போதனைசெய்யவல்லார்பூரணானந்தவாழ்வே. (௩)

நாதனைநாதாந்தநண்பனைநடுவாய்நின்ற
நீதனைக்கலந்துநிற்கநெஞ்சமேநீவாவென்றால்
வாதனைபெருக்கியென்னைவசஞ்செய்துமனந்தன்மாக்
க. போதனைசெய்தனன்றோபூரணானந்தவாழ்வே. (௪)

எண்ணியவெண்ணமெல்லாமிறப்புமேற்பிறப்புக்கா
சை, பண்ணியென்னறிவையெல்லாம்பாழாக்கியெனை
ப்பாழாக்குந், திண்ணியவினையைக்கொன்றுசிறியனையு
ய்யக்கொண்டாற், புண்ணியநினக்கேயன்றோபூரணா
னந்தவாழ்வே. (௫)

பத்திநீபத்திக்கானபலனுநீபலவாச்சொல்லுஞ்
சித்திநீசித்தர்சித்தித்திறமுநீதிறமார்மோன
முத்திநீமுத்திக்கானமுதலுநீமுதன்மையான
புத்திநீயெனக்கொன்றுண்டோபூரணானந்தவாழ்வே.()

தாயினுமினியநின்னைச்சரணெனவடைந்தநாயேன்
பேயினுங்கடையனாகிப்பிதற்றுதல்செய்தனன்றோ
நீயிடைமெழுகாய்நொந்தேன்றெளிவிலேன்வீணேகால
ம், போயினதாற்றுகில்லேன்பூரணானந்தவாழ்வே. (எ)

---

## மலைவளர்காதலி.

பதியுண்டுநிதியுண்டுபுத்திரர்கண்மித்திரர்கள்
பக்கமுண்டெக்காலமும்

பசுவுண்டுதவிசுண்டுதிட்டாந்தமாகயம
படனெனுந்திமிரமனுகாக்
கதியுண்டுஞானமாங்கதிருண்டுசதுருண்டு
காயசித்திகளுமுண்டு
கறையுண்டகண்டர்பாலம்மைநின்றுளிற்
கருத்தொன்றுமுண்டாகுமே
னதியுண்டகடலெனச்சமயத்தையுண்டபர
ஞானவானந்தவொளியே
நாதாந்தரூபமேவேதாந்தமோனமே
நானெனுமகந்தைதீர்த்தென்
மதியுண்டமதியானமதிவதனவல்லியே
மதுசூதனன்றங்கையே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (க)

தெட்டிலேவலியமடமாதர்வாய்வெட்டிலே
சிற்றிடையிலேநடையிலே
சேலொத்தவிழியிலேபாலொத்தமொழியிலே
சிறுபிறைநுதற்கீற்றிலே
பொட்டிலேயவர்கட்டுபட்டிலேபுனைகந்த
பொடியிலேயடியிலேமேற்
பூரித்தமுலையிலேநிற்கின்றநிலையிலே
புத்திதனைநுழையவிட்டு
நெட்டிலேயலையாமலறிவிலேபொறையிலே
நின்னடியர்கூட்டத்திலே

நிலைபெற்றவன்பிலேமலைவற்றமெஞ்ஞான
ஞேயத்திலேயுனிருதாண்
மட்டிலேமனதுசெலநினதருளுமருள்வையோ
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. (உ)

பூதமுதலாகவேநாதபரியந்தமும்
பொய்யென்றெனைக்காட்டியென்
போதத்தினடுவாகியடியீறுமில்லாத
போதபூரணவெளிக்கு
ே... துமறநில்லென்றுபாயமாவைத்துநினை
வெல்லாஞ்செய்வல்லசித்தா
மின்பவுருவைத்தந்தவனையேநின்னையே
யெளியேன்மறந்துய்வனோ
வேதமுதலானநல்லாகமத்தன்மையை
விளக்குமுட்கண்ணிலார்க்கு
மிக்கநின்மகிமையைக்கேளாதசெவிடர்க்கும்
வீறுவாதம்புகலும்வாய்
வாதநோயாளர்க்குமெட்டாதமுக்கணுடை
மாமருந்துக்கமிர்தமே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. (௩)

மிடியிட்டவாழ்க்கையாலுப்பிட்டகலமெனவு
மெய்யெலாமுள்ளுடைந்து

வீறிட்டசெல்வர்தந்தலைவாயில்வாசமாய்
வேதனைகளுறவேதனுந்
துடியிட்டவெவ்வினையையேவினுன்பாவிநான்
ருெடரிட்டதொழில்களெல்லாந்
துண்டிட்டசாண்கும்பியின்பொருட்டாயதுன்
ருெண்டர்பணிசெய்வதென்ருே
வடியிட்டசெந்தமிழினருமையிட்டாருரி
லரிவையோர்பரவைவாயி
லம்மட்டுமடியிட்டுநடைநடந்தருளடிக
ளடியீதுமுடியீதென
வடியிட்டமறைபேசுபச்சிளங்கிள்ளையே
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே. (சு)

பூரணிபுராதனிசுமங்கலைசுதந்தரி
புராந்தகித்ரியம்பகியெழிற்
புங்கவிவிளங்குசிவசங்கரிசகஸ்ரதள
புஷ்பமிசைவீற்றிருக்கு
நாரணிமனதீதநாயகிகுணதீத
நாதாந்தசத்தியென்றுன்
ஞமமேயுச்சரித்திடுமடியர்நாமமே
நானுச்சரிக்கவசமோ
வாரணிசடைக்கடவுளாரணியெனப்புகழ
வகிலாண்டகோடியீன்ற

வன்னையேபின்னையுங்கன்னியெனமறைபேசு
மானந்தரூபமயிலே
வாரணியுமிருகொங்கைமாதர்மகிழ்கங்கைபுகழ்
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (ரு)

பாகமோபெறவுனைப்பாடவறியேன்மல
பரிபாகம்வரவுமனதிற்
பண்புமோசற்றுமிலைநியமமோசெய்திடப்
பாவியேன்பாபரூப
தேகமோதிடமில்லைஞானமோகனவிலுஞ்
சிந்தியேன்பேரின்பமோ
சேரவென்றாற்கள்ளமனதுமோமெத்தவுஞ்
சிந்திக்குதென்செய்குவேன்
மோகமோமதமோகுரோதமோலோபமோ
முற்றுமாற்சரியமோதான்
முறியிட்டெனைக்கொள்ளுநிதியமோதேடவெனின்
மூசுவரிவண்டுபோல
மாகமோடவும்வல்லனெனையாளவல்லையோ
வளமருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (சு)

தூளேறுதூசிபோல்வினையேறுமெய்யெனுந்
தொக்கினுட்சிக்கினுளுஞ்

சுழலெறுகாற்றினிடையழலேறுபஞ்செனச்
சூறையிட்டறிவையெல்லா
நாளேறநாளேறவார்த்திகமெனுங்கூற்றி
னட்பேறவுள்ளுடைந்து
நயனங்களற்றதோருரோறுபோலவே
நானிலந்தனிலலையவோ
வெளேறுதந்தியைக்கனதந்தியுடன்வென்று
விளாயேறுமாலைசூடி
விண்ணேறுமேகங்கள்வெற்பேறிமறைவுற
வெருட்டியகருங்கூந்தலாய்
வானேறுகண்ணியேவிடையேறுமெம்பிரான்
மனதுக்கிசைந்தமயிலே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (எ)

பூதமொடுபழுஷிவளரிந்திரியமாம்பேய்கள்
புந்திமுதலானபேய்கள்
போராடுகோபாதிராக்ஷசப்பேய்களென்
போதத்தையூடழித்து
வேதனைவளர்த்திடச்சதுர்வேதவஞ்சன்
விதித்தானிவல்லலெல்லாம்
வீழும்படிக்குனதுமௌனமந்த்ராதிக்ய
வித்தையைவியந்தருள்வையோ
நாதவடிவாகியமஹாமந்த்ரரூபியே
நாதாந்தவெட்டவெளியே

நற்சமயமானப்யிர்தழையவருமேகமே
ஞானவானந்தமயிலே
வாதமிடுபரசமயம்யாவுக்குமுணர்வரிய
மகிமைபெறுபெரியபொருளே
வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெண்ணுமையே. (அ)

---

## அகிலாண்டநாயகி.

### சந்தவிருத்தம்.

வட்டமிட்டொளிர்பிராணவாயுவெனு
நிகளமோடுகமனஞ்செயு
மனமெனும்பெரியமத்தயானையையென்
வசமடக்கிடின்முமண்டலத்
திட்டமுற்றவளராஜயோகமிவன்
யோகமென்றறிஞர்புகழவே
யேழையேனுலகினீடுவாழ்வினி
யிங்கிதற்குமனுமானமோ
பட்டவர்த்தனர்பராவுசக்ரதர
பாக்யமானசுகயோகமும்
பாரகாவியகவித்வநான்மறை
பராயணஞ்செய்மதியூகமு
மட்டசித்தியுநலன்பருக்கருள
விருதுகட்டியபொன்னமே

யண்டகோடிபுகழ்காவைவாழுமகி
லாண்டநாயகியெனம்மையே. (௫)

---

## பெரியநாயகிவிருத்தம்.

காற்றைப்பிடித்துமட்கரகத்தடைத்தபடி
கன்மப்புனற்குளூறுங்
கடைகெட்டநவவாயில்பெற்றபசுமட்கலக்
காயத்துளெனையிருத்திச்
சோற்றைச்சுமத்திநீபந்தித்துவைக்கத்
துருத்திக்குண்மதுவென்னவே
துள்ளித்துடித்தென்னபேறுபெற்றேனருட்
டோயநீபாய்ச்சல்செய்து
நாற்றைப்பறித்ததெனஞானமாம்பயிரதனை
நாட்டிப்புலப்பட்டியு
நமனுனைதீப்பூடுமனுகாமன்முன்னின்று
நாடுசிவயோகமான
பேற்றைப்பகுந்தருளியெனையாளவல்லையோ
பெரியவகிலாண்டகோடி
பெற்றநாயகிபெரியகபிலைமாநகர்மருவு
பெரியநாயகியம்மையே. (௬)

---

# தந்தைதாய்.

தந்தைதாய்மகவுமனைவாழ்க்கையாக்கை
சகமனைத்துமௌனியருடழைத்தபோதே
யிந்திரசாலங்கனவுகானனீரா
யிருந்ததுவேயிவ்வியற்கையென்னேயென்னே. (க)

என்னைநான்கொடுக்கவொருப்பட்டகால
மியாதிருந்தென்னவைபோயென்னென்னைநீங்கா
வன்னைபோலருள்பொழியுங்கருணைவாரி
யானந்தப்பெருமுகிலேயரசேசொல்லாய். (உ)

அரசேநின்றிருக்கருணையல்லாதொன்றை
யறியாதசிறியேனுனதனுன்முத்திக்
கரைசேரும்படிக்குனருட்புணையைக்கூட்டுங்
கைப்பிடியேகடைப்பிடியாக்கருத்துட்கண்டேன். ()

கண்டேனிங்கென்னையுமென்றனையுநீங்காக்
கருணையுநின்றன்னையுநான்கண்டேன்கண்டேன்
விண்டேனென்றெனைப்புறம்பாத்தள்ளவேண்டாம்
விண்டதுநின்னருட்களிப்பின்வியப்பாலன்றே. (ச)

ஓவென்றசுத்தவெளியொன்றேநின்றிங்
குயிராயெல்லாம்வம்பினெனாவுவட்டாவின்பத்
தேவென்றநீகலந்துகலந்துமுத்தி
சேர்த்தனையேற்குறைவாமோசெகவிலாசம். (ரு)

செகத்தையெல்லாமணுவளவுஞ்சிதறுவண்ணஞ்
சேர்த்தணுவில்வைப்பையணுத்திரளையெல்லா
மகத்துவமாப்பிரமாண்டமாகச்செய்யும்
வல்லவாநீநினைந்தவாறேயெல்லாம். (சா)

சொல்லாலேவாய்துடிப்பதல்லானெஞ்சந்
    துடித்திருகணீரருவிசொரியத்தேம்பிக்
கல்லாலேயிருந்தநெஞ்சுங்கல்லான்முக்கட்
    கனியேயெனக்குருகிடவுங்காண்பேன்கொல்லோ. (எ)

---

## பெற்றவட்கே.

பெற்றவட்கேதெரியுமந்தவருத்தம்பிள்ளை
    பெருப்பேசுதயறிவாரோபேரானந்த
முற்றவர்க்கேகண்ணீர்கம்பலையுண்டாகு
    முருதவரோகன்னெஞ்சமுடையராவார். (க)

ஆலாவென்றமுதுதொழுங்கையராகி
    யப்பனேயானந்தவடிகளேநீ
வாவாவென்றவர்க்கருளுங்கருணையெந்தாய்
    வன்னெஞ்சர்க்கிரங்குவதெவ்வாறுநீயே. (உ)

நீயேயிங்கெளியேற்குத்தாகமோக
    நினைவூடேநின்றுணர்த்திநிகழ்த்தலாலே
பேயேற்குத்தனக்கெனவோரன்புமுண்டோ
    பெம்மானேயின்னமன்புபெருகப்பாராய். (ங)

பாராயோவென்றுயரமெல்லாமையா
    பகருமுன்னேதெரியாதோபாவியேன்முன்
வாராயோவின்னமொருகாலானலு
    மலர்க்காலென்சென்னிமிசைவைத்திடாயோ. (ச)

வைத்திடுங்காலைப்பிடித்துக்கண்ணின்மார்பில்
வைத்தணைத்துக்கொண்டுகையால்வளைத்துக்கட்டிச்
சித்தமிசைப்புகவிருத்திப்பிடித்துக்கொண்டு
தியக்கமறவின்பசுகஞ்சேர்வதென்றோ. (௫)

சேராமற்சிற்றினத்தைப்பிரித்தெந்நாளும்
திருவடிப்பேரினத்துடனேசேராவண்ண
மாராகநானலைந்தேனரசேநீதா
னறிந்திருந்துமாயையிலேனழுந்தவைத்தாய். (௬)

வைத்தபொருளுடலாவிமூன்றுநின்கை
வசமெனவேயான்கொடுக்கவாங்கிக்கொண்டு
சித்தமிசைப்புகுந்ததுதான்மெய்யோபொய்யோ
சிறியேற்கிங்குளவுரையாய்திகையாவண்ணம். (௭)

திகையாதோவென்றூனும்பேரானந்தத்
தெள்ளமுதமுதவாமற்றிவலைகாட்டி
வகையாகவலக்கழித்தாயுண்டுடுத்து
வாழ்ந்தேனிரண்டுகான்மாடுபோலே. (௮)

மாடுமக்கள்சிற்றிடையார்செம்பொனுடை
வைத்தகனதனமேடைமாடகூடம்
வீடுமென்பாற்றொடர்ச்சியோவிடைவிடாமன்
மிக்ககதிவீடன்றோவிளங்கல்வேண்டும். (௯)

விளங்கவெனக்குள்ளுள்ளேவிளங்காநின்ற
வேதகமேபோதகமேவிமலவாழ்வே
களங்கரகிதப்பொருளேயென்னைநீங்காக்
கண்ணுதலேநாதாந்தக்காட்சிப்பேறே. (௧௧)

நாதமேநாதாந்தவெளியேசுத்த
ஞாதுறுவேஞானமேஞேயமேநல்
வேதமேவேதமுடிவானமோன
வித்தேயிங்சென்னையினிவிட்டிடாதே. (கக)

---

## கல்லாலின்.

கல்லாலினீழறனிலொருநால்வர்க்குங்
கடவுணியுணர்த்துவதுங்கைக்காட்டென்றாற்
சொல்லாலேசொலப்படுமோசொல்லுந்தன்மை
துரும்புபற்றிக்கடல்கடக்குந்துணிபேயன்றோ. (க)

அன்றேவாமோவெனவுஞ்சமயகோடி
யத்தனையும்வெவ்வேறாயரற்றநேரோ
நின்றேயநினைப்பெறுமாறெவ்வாறுங்கே
நின்னருள்கொண்டறிவதல்லா னெறிவேறுண்டோ.

நெறியார்க்கினின்னையன்றியகிலம்வேறோ
நிலநீர்தீக்கால்வானுநீயலாத
குறியாதுமில்லையென்றால்யாங்கள்வேறோ
கோதையொருகூறுடையாய்கூறாய்கூறாய். (ங)

கூறாயவைம்பூதக்கூமையைத்தாங்கிக்
குணமிலாமனமெனும்பேய்க்குரங்கின்பின்னே
மாறாதகவலையுடன்சுழலவென்னை
வைத்தனையேபரமேநின்மகிமைநன்றே. (ச)

நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ
நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
யின்றெனக்கு வெளியானா லெல்லாம் வல்ல
விறைவா நின்னடியருட னிருந்து வாழ்வேன். (ரு)

வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
வையகத்தார் கற்பனையா மயக்கமான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
பரமே நின்றானந்தப் பார்வை யெங்கே. (சு)

எங்கேயெங் கேயருளென் றெமையிரந்தா
னேழையிவனெனவு மெண்ணியிச்சை கூரு
மங்கேயெங் கேயெளிவந் தென்னையாண்ட
வாரமுதே யுனைக்காண்பானலந்து போனேன். (எ)

போனநாட் கிரங்குவதே தொழிலா விங்ஙன்
பொருந்துநாளத் தனையும் போக்கினேனென்
ஞானநாயகனே நின் மோனஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந்நாளோ. (அ)

நாட்பட்ட கமலமென்ன விதய மேவு
நறுந்தேனே துன்மார்க்க நாரிமார்கண்
வாட்பட்ட காயமிந்தக் காயமென்றே
வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி. (கூ)

நீதியெங்கே மறையெங்கே மண்விண்ணெங்கே
நித்தியரா மவர்களெங்கே நெறிதப்பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்களெங்கே
தற்பர நீயின்றுமொன்றைச் சமைப்பதானால். (க0)

ஆறாலும்யானென திங்கற்றவெல்லை
யதுபோதுமதுகதிதானல்லவென்று
போறாலும்யான்போவனல்லான்மோனப்
புண்ணியனேவேறுமொருபொருளோராடேன். (கக)

பொருளே நின்பூரணமேலிட்டகாலம்
போக்குவரவுண்டோதற்போதமுண்டோ
விருடானுண்டோவல்லால்வெளிதானுண்டோ
வின்பமுண்டோதுன்பமுண்டோயாமங்குண்டோ.

உண்டோநீபடைத்தவுயிர்த்திரளிலென்போ
லொருபாவிதேகாதியுலகம்பொய்யாக்
கண்டேயுமெள்ளளவுத்துறவுமின்றிக்
காசினிக்குளலைந்தவரார்காட்டாய்தேவே. (கரு)

தேவரெல்லாந்தொழச்சிவந்தசெந்தாண்முக்கட்
செங்கரும்பேமொழிக்குமொழிதித்திப்பாக
மூவர்சொலுந்தமிழ்கேட்குந்திருச்செவிக்கே
மூடனேன்புலம்பியசொன்முற்றுமோதான். (கஎ)

முற்றுமோவெனக்கினியானந்தவாழ்வு
மூதறிவுக்கினியாய்நின்முளரித்தாளிற்
பற்றுமோசற்றுமில்லையையோவையோ
பாவிபடுங்கட்கலக்கம்பார்த்திலாயோ. (கரு)

பார்த்தனவெல்லாமழியுமதனாற்சுட்டிப்
பாராதேபார்த்திருக்கப்பரமேமோன
மூர்த்திவடிவாயுணர்த்துங்கைக்காட்டுண்மை
முற்றியெனதல்லல்வினைமுடிவதென்றோ. (கசு)

என்றுனை நீயென்றுளம்யாமென்பதென்னை
விறுநிற்கவெல்லாந்தாமில்லையென்றே
பொன்றிடச்செய்வல்லவனீயெமைப்படைக்கும்
பொற்புடையாயென்னினதுபொருந்திடாதே. (கஎ)

பொருந்துசகமனைத்தினையும்பொய்பொய்யென்று
புகன்றபடிமெய்யென்றேபோதரூபத்
திருந்தபடியென்றிருப்பதன்றேயன்றோ
வெம்பெருமான்யான்கவலையெய்தாக்காலம். (கஅ)

காலமேகாலமொருமூன்றுங்காட்டுங்
காரணமேகாரணகாரியங்களில்லாக்
கோலமேயெனைவாவாவென்றுகூவிக் [லாய்
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோசொல்

சொல்லாயதகுதியெல்லாங்கடந்துநின்ற
சொரூபானந்தச்சுடரோதொண்டனேனைக்
கல்லாகப்படைத்தாலுமெத்தநன்றே
கரணமுடனுறவுகலக்கமாட்டேன். (உ0)

கலங்காதநெஞ்சுடையஞானதீரர்
கடவுளுனைக்காணவேகாயமாதி
புலங்காணார்நானொருவன்ஞானம்பேசி
பொய்க்கூடுகாத்ததென்னபுதுமைகண்டாய். (உக)

கண்டிலையோயான்படும்பாடெல்லாமூன்று
கண்ணிருந்துந்தெரியாதோகசிந்துள்ளன்பார்
தொண்டரடித்தொண்டனன்றோகருணைநீங்காச்
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. (உஉ)

சோதியாயிருட்பிழம்பைச்சூறையாடுந்
தூவெளியேயெனைத்தொடர்ந்துதொடர்ந்தெந்நாளு
வாதியாநின்றவினைப்பகைமையவென்ற [ம்
வாழ்வேயிங்குனைப்பிரிந்துமயங்குகின்றேன். (உங)

மயக்குறுமென்மனமறுகாப்பாதைகாட்டி
வல்வினையைப்பறித்துனையேவாழ்வோனெனன்
செயக்கடவேன்செயலெல்லாநினதேயென்று
செங்கைகுவிப்பேனல்லாற்செயல்வேறில்லை. (உச)

வேறுபடுஞ்சமயமெல்லாம்புகுந்துபார்க்கின்
விளங்குபரம்பொருளேநின்விளையாட்டல்லான்
மாறுபடுங்கருத்தில்லைமுடிவின்மோன
வாரிதியினதித்திரள்போல்வயங்கிற்றம்மா. (உரு)

அம்மாவீததிசயந்தானன்றேவன்றே
வகண்டநிலையாக்கியென்னையறிவாம்வண்ணஞ்
சும்மாவேயிருக்கவைத்தாயையாவாங்கே
சுகமயமாயிருப்பதல்லாற்சொல்வானென்னே. (உசு)

என்னேநான்பிறந்துழலவந்தவாறிங்
கெனக்கெனவோர்செயலிலையேயேழையென்பான்
முன்னேசெய்வினையெனவும்பின்னேவந்து
மூளும்வினையெனவும்வரமுறையேனெந்தாய். (உஎ)

தாயானதண்ணருளைநிரம்பவைத்துத்
தமியேனைப்புரவாமற்றள்ளித்தள்ளிப்
போயானதென்கொலையாவேகதேசம்
பூரணத்துக்குண்டோதான்புகலல்வேண்டும். (உஅ)

புகலரியநின்விளையாட்டென்னேயெந்தாய்
புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி
யிகல்விளைக்குமலமாயைகன்மத்தூடே
யிடருறவுஞ்செய்தனையேயிரக்கமீதோ. (உக)

இரக்கமொடுபொறையீதலறிவாசார
மில்லேனனல்லோர்களீட்டங்கண்டாற்
கரக்குமியல்புடையேன்பாழ்நெஞ்சமெந்தாய்
கருந்தாதோவல்லுருக்கோகரியகல்லோ. (ங0)

---

## பராபரக்கண்ணி.

சீராருந்தெய்வத்திருவருளாம்பூமிமுதற்
பாராதியாண்டபதியேபராபரமே. (க)

கண்ணாரக்கண்டோர்கருப்பொருள்காணமலருள்
விண்ணூடிருந்தவின்பவெற்பேபராபரமே. (உ)

சிந்தித்தவெல்லாமென்சிந்தையறிந்தேயுதவ
வந்தகருணைமழையேபராபரமே. (ங)

ஆராவமுதேயரசேயானந்தவெள்ளப்
பேராறேமோனப்பெருக்கேபராபரமே. (ச)

ஆரறிவாரென்னவனந்தமறையோலமிடும்
பேரறிவேயின்பப்பெருக்கேபராபரமே. (ரு)

உரையிறந்தவன்பருளத்தோங்கொளியாயோங்கிக்
கரையிறந்தவின்பக்கடலேபராபரமே. (சா)

எத்திக்குந்தானாகியென்னிதயத்தேயூறித்
தித்திக்குமானந்தத்தேனே பராபரமே. (௭)

திக்கொடுகீழ்மேலுந்திருவருளாம்பொற்பறிந்தோர்
கைக்குள்வளர்நெல்லிக்கனியே பராபரமே. (அ)

முத்தேபவளமேமொய்த்தபசும்பொற்சுடரோ
சித்தேயென்னுள்ளத்தெளிவே பராபரமே. (௯)

கண்ணேகருத்தேயென்கற்பகமேகண்ணிறைந்த
விண்ணேயானந்தவியப்பே பராபரமே. (க0)

வாக்காய்மனதாய்மனவாக்கிறந்தவர்பாற்
றூக்காதேதாக்குந்தனியே பராபரமே. (கக)

பார்த்தவிடமெல்லாம்பரவெளியாய்த்தோன்றவொரு
வார்த்தைசொல்லவந்தமனுவே பராபரமே. (க௨)

வானந்தமண்ணினந்தம்வைத்துவைத்துப்பார்க்கவென
க்,கானந்தந்தந்தவரசே பராபரமே. (க௩)

அன்பைப்பெருக்கியெனதாருயிரைக்காக்கவந்த
வின்பப்பெருக்கேயிறையே பராபரமே. (க௪)

வானமெல்லாங்கொண்டமௌனமணிப் பொட்டகத்து
க்,கானபணியானவணியே பராபரமே. (க௫)

ஓடுமிருநிதியுமொன்றாகக்கண்டவர்க
ளாடும்பொருளானநட்பே பராபரமே. (க௬)

சித்தநினைவுஞ்செயுஞ்செயலுநீயெனவா
மூத்தமர்கட்கானவுறவே பராபரமே. (க௭)

போதாந்தப்புண்ணியர்கள்போற்றிசயபோற்றியெனும்
வேதாந்தவீட்டில்விளக்கேபராபரமே. (௧௮)

முத்தாந்தவீதிமுளரிதொழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந்தேவேபராபரமே. (௧௯)

ஏனந்தருமுடலமென்னதியானென்பதற
வானந்தம்வேண்டியலந்தேன்பராபரமே. (௨0)

என்புருகிநெஞ்சமிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்கவலந்தேன்பராபரமே. (௨௧)

சுத்தவறிவாய்ச்சுகம்பொருந்தினல்லாலென்
சித்தந்தெளியாதென்செய்வேன்பராபரமே. (௨௨)

மாறுவனுபூதிவாய்க்கினல்லாலென்மயக்கந்
தேறுதென்செய்வேன்சிவமேபராபரமே. (௨௩)

தாகமறிந்தின்பநிட்டைதாராயேலாகெடுவேன்
றேகம்விழுந்திடினென்செய்வேன்பராபரமே. (௨௪)

அப்பாவென்னெய்ப்பில்வைப்பேயாற்றுகிலேன்போ
ற்றியென்று, செப்புவதல்லால்வேறென்செய்வேன்ப
ராபரமே. (௨௫)

உற்றறியுமென்னறிவுமுட்கருவிபோற்சவிமாண்
டற்றுமின்பந்தந்திலேயையாபராபரமே. (௨௬)

சொல்லாலடங்காச்சுகக்கடலில்வாய்மடுக்கி
னல்லாலென்றுகமறுமோபராபரமே. (௨௭)

பாராயோவென்னைமுசம்பார்த்தொருகாலென்கவலை
தீராயோவாய்திறந்துசெப்பாய்பராபரமே. (௨௮)

ஓயாதோவென்கவலையுள் ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையாபகராய்பராபரமே. (உகூ)

ஓகோவுனைப்பிரிந்தாருள ளங்கனலில்வைத்த
பாகோமெழுகோபகராய்பராபரமே. (௩0)

கூர்த்தவறிவத்தனையுங்கொள்ளைகொடுத்தென்னருளைப்
பார்த்தவனுனென்னைமுகம்பாராய்பராபரமே. (௩க)

கடலமுதேதேனேயென்கண்ணேகவலைப்
படமுடியாதென்னைமுகம்பார்நீபராபரமே. (௩உ)

உள்ளமறிவாயுழப்பறிவாய்நானேழை
தள்ளிவிடின்மெத்தத்தவிப்பேன்பராபரமே. (௩௩)

கன்றினுக்குச்சேதாகனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணையெந்தாய்பராபரமே. (௩௪)

எண்ணுதவெண்ணமெலாமெண்ணியெண்ணியேழை
நெஞ்சம், புண்ணாகச்செய்ததினிப்போதும்பராபரமே.

ஆழ்ந்துருப்பெனவேயங்குமிங்குமுன்னடிமை
பாழிற்றிரிவதென்னபாவம்பராபரமே. (௩௬)

கற்றவறிவாலுனைநான்கண்டவன்போற்கூத்தாடிற்
குற்றமென்றென்னெஞ்சேகொதிக்கும்பராபரமே. ()

ஐயோவுனைக்காண்பாணசைகொண்டதத்தனையும்
பொய்யோவெளியாப்புகலாய்பராபரமே. (௩௮)

துன்பக்கண்ணீரிற்றுளைந்தேற்குன்னானந்த
வின்பக்கண்ணீர்வருவதெந்நாள்பராபரமே. (௩௯)

வஞ்சனையும்பொய்யுமுள்ளேவைத்தழுக்காறுயுளறு
நெஞ்சனுக்குமுண்டோநெறிதான்பராபரமே. (௪0)

பாசம்போய்நின்றவர்போற்பாராட்டியானுமு
மோசம்போனேனென்முறையோபராபரமே. (௪௧)

நன்றறியேன் றீதறியேனென்றுநின்றவனு
மொன்றறியேனேழையென்னேபராபரமே. (௪௨)

இன்றுபுதிதன்றேயெளியேன்படுந்துயர
மொன்றுமறியாயோவுனாயாய்பராபரமே. (௪௩)

எத்தனைதான்சன்மமெடுத்தெத்தனைநான்பட்டதுய
ரத்தனையுநீயறிந்ததன்றோபராபரமே. (௪௪)

இந்தநாட்சற்றுமிரங்கிலையேற்காலன்வரு
மந்தநாட்காக்கவல்லாரார்காண்பராபரமே. (௪௫)

உற்றுற்றுநாடியுளமருண்டபாவியைநீ
சற்றிரங்கியாளத்தகாதோபராபரமே. (௪௬)

எள்ளளவுநின்னைவிடவில்லாவெனைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன்சாற்றாய்பராபரமே. (௪௭)

பாடிப்படித்துலகிற்பாராட்டிநிற்பதற்கோ
தேடியெனையடிமைசேர்த்தாய்பராபரமே. (௪௮)

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லறவென் சொல்லிறுதிக், கென்னத்தைச்சொல்வே னெளியேன் பராபரமே. (௪௯)

சொல்லும்பொருளுமற்றுச்சும்மாவிருப்பதற்கே
யல்லும்பகலுமெனக்காசைபராபரமே. (௫0)

நேசநிருவிகற்பநிட்டையல்லாலுன்னடிமைக்
காசையுண்டோநீயறியாதன்றேபராபரமே. (ருக)

துச்சனெனவேண்டாமித்தொல்லுலகிலல்லல்கண்டா
லச்சமிகவுடையேனையாபராபரமே. (ருஉ)

கண்ணாவாரேனுமுனைக்கைகுவியாராயினந்த
மண்ணாவார்நட்பைமதியேன்பராபரமே. (ருங)

கொல்லாவிரதங்குவலயமெல்லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென்னிச்சைபராபரமே. ()

எத்தாற்பிழைப்பேனோவெந்தையேநின்னருட்கே
பித்தானேனென்மெத்தவுநான்பேதைபராபரமே. (ருரு)

வாயினாற்பேசாமௌனத்தைவைத்திருந்துந்
தாயிலார்போனான்றளர்ந்தேன்பராபரமே. (ருசா)

அன்னையிலாச்சேய்போலலக்கணுற்றேன்கண்ணார
வென்னகத்திற்றாய்போலிருக்கும்பராபரமே. (ருஎ)

உற்றுநினைக்கிற்றுயரமுள்ளுள்ளேசெந்தீயாய்ப்
பற்றநொந்தேனென்னைமுகம்பார்நீபராபரமே. (ருஅ)

பொய்யனிவனென்றுமெள்ளப் போதிப்பார்சொற்கே
கைவிடவும்வேண்டாமென்கண்ணேபராபரமே. [ட்டுக்

எண்ணமறிந்தேயிளைப்பறிந்தேயேழையுய்யும்
வண்ணந்திருக்கருணைவையாய்பராபரமே. (சா0)

நாட்டாதேயென்னையொன்றினாட்டியிதமகிதங்
காட்டாதேயெல்லாநீகண்டாய்பராபரமே. (சாக)

உன்னைநினைந்துன்னிறைவினுள்ளேயுலாவுமென்னை
யன்னைவயிற்றினடைக்காதேபராபரமே. (௬௨)

பரமுனக்கென்றெண்ணும்பழக்கமேமாறு
வரமெனக்குத்தந்தருளென்வாழ்வேபராபரமே. (௬௩)

வந்தித்துநின்னைமறவாக்கடனாகச்
சிந்திக்கநின்னருள்செய்யாய்பராபரமே. (௬௪)

எவ்வுயிருமென்னுயிர்போலெண்ணியிரங்கவுநின்
றெய்வவருட்கருணைசெய்யாய்பராபரமே. (௬௫)

வெட்டவெளிப்பேதையன்யான் வேறுகபடொன்ற
றியேன், சிட்டருடன்சேரவைந்ததென்டன்பராபரமே.

இரவுபகலற்றவிடத்தேகாந்தயோகம்
வரவுந்திருக்கருணைவையாய்பராபரமே. (௬௭)

மால்காட்டிச்சிந்தைமயங்காமனின்றுசுகக்
கால்காட்டிவாங்காதேகண்டாய்பராபரமே. (௬௮)

எப்பொருளுநீயெனவேயெண்ணிநான்றோன்றாத
வைப்பையழியாநிலையாவையாய்பராபரமே. (௬௯)

சும்மாவிருப்பதுவேசுட்டற்றபூரணமென்
றெம்மாலறிதற்கெளிதோபராபரமே. (௭0)

முன்னொடுபின்பக்கமுடியடிநாப்பண்ணறநின்
றன்னொடுநாளிற்பதென்றோசாற்றாய்பராபரமே. (௭௧)

மைவண்ணந்தீர்ந்தமௌனிசொன்னதெய்வண்ண
மவ்வண்ணநிட்டையருளாய்பராபரமே. (௭௨)

வித்தன்றியாதும்விளைவுண்டோநின்னருளாஞ்
சித்தன்றியாங்களுண்டோசெப்பாய்பராபரமே. (௭௩)

ஆங்காரமற்றுன்னறிவானவன்பருக்கே
தூங்காததூக்கமது தூக்கும்பராபரமே. (௭௪)

சிந்தையவிழ்ந்தவிழ்ந்து சின்மயமாநின்னடிக்கே
வந்தவர்க்கேயின்பநிலைவாய்க்கும்பராபரமே. (௭௫)

சொல்லாடாவூமனைப்போற்சொல்லிறந்துநீயாகி
னல்லாலெனக்குமுத்தியாமோபராபரமே. (௭௬)

பேச்சாகாமோனம்பிறவாமுளைத்தென்றற்
காச்சாச்சுமேற்பயனுண்டாமோபராபரமே. (௭௭)

கெட்டியென்றுன்னன்பர்மலங் கெட்டயர்ந்தோர்பூ
ரணமாந், தொட்டிலுக்குட்சேய்போற் றுயின்றார்பரா
பரமே. (௭௮)

காட்டவருளிருக்கக்காணாதிருண்மலத்து
நாட்டமெனக்குவரனன்றோபராபரமே. (௭௯)

எத்தன்மைக்குற்றமியற்றிடினுந்தாய்பொறுக்கு
மத்தன்மைநின்னருளுமன்றோபராபரமே. (௮0)

எத்தனையோதேர்ந்தாலுமென்னாலேயின்பமுண்டோ
சித்தருவேயின்பச்சிவமேபராபரமே. (௮௧)

மண்ணொடுவிண்காட்டிமறைந்துமறையாவருளைக்
கண்ணொடுகண்ணாகவென்றுகாண்பேன்பராபரமே. ()

பஞ்சரித்துநின்னைப்பலகாலிரந்ததெல்லா
மஞ்சலெனும்பொருட்டேயன்றோபராபரமே. (௮௩)

எங்கெங்கேபார்த்தாலுமெவ்வுயிர்க்குமவ்வுயிரா
யங்கங்கிருப்பதுநீயன்றோபராபரமே. (அச)

அனைத்துமாய்நின்றுயேயான்வேறோநின்னை
நினைக்குமாறெங்கேநிகழ்த்தாய்பராபரமே. (அரு)

நின்போதத்தாலேநினைப்புமறப்புமென்று
லென்போதமெங்கேயியம்பாய்பராபரமே. (அசு)

ஒன்றைநினைந்தொன்றைமறந்தோடுமனமெல்லாநீ
யென்றறிந்தாலெங்கேயியங்கும்பராபரமே. (அஎ)

கொழுந்தில்வயிரமெனக்கோதறவுள்ளன்பி
லழுந்துமவர்க்கேசுகமுண்டாகும்பராபரமே. (அஅ)

பற்றும்பயிர்க்குப்படர்கொழுந்துபோற்பருவம்
பெற்றவர்க்கேநின்னருடான்பேறும்பராபரமே. (அகூ)

யோகியர்க்கேஞானமொழுங்காம்பேரன்பான
தாகியரும்யோகமுன்னேசார்ந்தோர்பராபரமே. (கூ0)

அல்லும்பகலுமறிவாகிநின்றவர்க்கே
சொல்லும்பொருளுஞ்சுமைகாண்பராபரமே. (கூக)

எச்சிலென்றுபூவையிகழ்ந்தோர்க்குனைப்போற்றப்
பச்சிலையுங்கிள்ளப்படுமோபராபரமே. (கூஉ)

அந்தக்கரணமடங்கத்துறப்பதுவே
யெந்தத்துறவினுநன்றெந்தாய்பராபரமே. (கூரு)

தன்னையறிந்தாற்றலைவன்மேற்பற்றலது
பின்னையொருபற்றுமுண்டோபேசாய்பராபரமே. ()

அன்பாற்கரைந்துகண்ணீராறுகண்டபுண்ணியருக்
குன்பால்வரவழிதானுண்டோபராபரமே. (கரு)

தன்னையறிந்தருளேதாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற்குபாயம்பராபரமே. (கசு)

கற்றகலையாணிலைதான்காணுமோகாண்பதெல்லா
மற்றவிடத்தேவெளியாமன்றேபராபரமே. (கள)

கண்மூடிக்கண்விழித்துக்காண்பதுண்டோநின்னருளா
ம், விண்மூடினெல்லாம்வெளியாம்பராபரமே. (கஅ)

நேரோநினதருளென்னெஞ்சைக்கவரின்றும்
பாரோன்சுகமும்படைப்பேன்பராபரமே. (கக)

வான்காணவேண்டின்மலையேறலொக்குமுன்னை
நான்காணப்பாவனைசெய்நட்டம்பாராபரமே. (க00)

வாதனைவிட்டுன்னருளின் மன்னினல்லால்வேறுமொரு
சாதனைதானுண்டோநீசாற்றாய்பராபரமே. (க0க)

பாரகமும்விண்ணகமும்பற்றாகநிற்பதருட்
டாரகத்தைப்பற்றியன்றோசாற்றாய்பராபரமே. (க0உ)

விளக்குந்தகளியையும்வேறென்றோர்நின்னைத்
துளக்கமறச்சீவனென்றுசொல்வார்பராபரமே. (க0ங)

பாராதிநீயாப்பகர்ந்தாலகமெனவு
மாராயுஞ்சீவனுநீயாங்காண்பராபரமே. (க0ச)

பொய்யைப்பொய்யென்றறியும்போதத்துக்காதரவுன்
மெய்யருளேயன்றோவிளம்பாய்பராபரமே. (க0ரு)

வருவான்வந்தேனெனல்போன்மன்னிய பூியுஞ்சகத்
தைத், தெரிவாகவில்லையென்றதிரம்பராபரமே.(௧0௬)

மாயாசகமிலையென்மற்றெனக்கோர்பற்றுமிலை
நீயேநானென்றுவந்துநிற்பேன்பராபரமே. (௧0எ)

வானுதிநீயெனவேவைத்தமறையென்னையுநீ
தானாகச்சொல்லாதோசாற்றுய்பராபரமே. (௧0அ)

வெள்ளக்கருணைமதவேழமாநின்னருட்கென்
கள்ளக்கருத்தேகவளம்பராபரமே. (௧0௯)

வண்டாய்த்துவண்டுமௌனமலரணைமேற்
கொண்டார்க்கோவின்பங்கொடுப்பாய்பராபரமே. ()

மாயைமுதலாம்விலைநீமன்னுயிர்நீமன்னுயிர்தேர்ந்
தாயுமறிவானதுநீயன்றேபராபரமே. (௧௧௧)

என்னறிவும்யானுமெனதென்பதுவுமாமிவைக
ணின்னவையேயன்றோநிகழ்த்தாய்பராபரமே. (௧௧உ)

பாரறியாதண்டப் பரப்பறியாதுன்பெருமை
யாரறிவார்நானேயறிவேன்பராபரமே. (௧௧௩)

அண்டம்னைத்திலுமாயப்பாலுக்கப்பாலுங்
கொண்டநின்னையாரறிந்துகொள்வார்பராபரமே. ()

ஒப்புயர்வொன்றின்றியொலிபுகாமோனவட்டக்
கப்பலுக்காம்வான்பொருணீகண்டாய்பராபரமே. ()

என்போலெளியவருமெங்கெங்கும்பார்த்தாலு
முன்போல்வலியவருமுண்டோபராபரமே. (௧௧௬)

பார்க்கினண்டபிண்டப்பரப்பனைத்துநின்செயலே
யார்க்குஞ்செயலிலையேயையயாபராபரமே. (கஎ)

ஒன்றேபலவேயுருவேயருவேயோ
வென்றேயழைப்பதுன்னையென்றுபராபரமே. (கஅ)

செப்புவதெல்லாஞ்செபநான்சிந்திப்பதெல்லாநின்
ளொப்பிறியானமெனவோர்ந்தேன்பராபரமே. (கக)

ஆரிருந்தென்னார்போயென்னாரமுதாநின்னருளின்
சீரிருந்தாலுய்வேன்சிவமேபராபரமே. (கஉ0)

வஞ்சநமன்வாதனைக்கும்வன்பிறவிவேதனைக்கு
மஞ்சியுனையடைந்தேனையாபராபரமே. (கஉக)

எந்தப்படியுன்னிதயமிருந்ததெமக்
கந்தப்படிவருவதன்றோபராபரமே. (கஉஉ)

எந்தெந்தநாளுமெனைப்பிரியாதென்னுயிராய்ச்
சிந்தைகுடிகொண்டவருட்டேவேபராபரமே. (கஉங)

அஞ்சலஞ்சலென்றடிமைக்கப்போதைக்கப்போதே
நெஞ்சிலுணர்த்துநிறைவேபராபரமே. (கஉச)

என்னையுன்றன்கைக்களித்தார்யாவரொன்னையான்கொடு
த்துப், பின்னையுன்றைற்பெற்றநலம்பேசேன்பராபரமே.

வாய்பேசாவூமையெனவைக்கவென்றோநீமௌனத்
தாயாகவந்தருளைத்தந்தாய்பராபரமே. (கஉரு)

தன்னைத்தந்தென்னைத்தடுத்தாண்டநின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபலனெந்தாய்பராபரமே. ( )

மார்க்கண்டர்க்காகமறலிபட்டபாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க்கென்னபயங்காண்பராபரமே.(கஉஅ)

சுட்டியுணராமற்றுரியநிலையாய்வெளியில்
விட்டநின்னையாரோவியப்பேன்பராபரமே. (கஉகூ)

சூதொன்றுமின்றியென்னைச்சும்மாவிருக்கவைத்தா
யீதொன்றும்போதாதோவின்பம்பராபரமே. (கூ0)

வாயொன்றும்பேசாமௌனியாய்வந்தாண்ட
தேயொன்றும்போதாதோவின்பம்பராபரமே. (கூக)

என்றுமிருந்தபடிக்கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோவுனாயாய்பராபரமே. (கூஉ)

எண்டிசைகீழ்மேலானவெல்லாம்பெருவெளியாக்
கண்டவிடத்தென்னையுநான்கண்டேன்பராபரமே. ()

பித்தனையேதும்மறியாப்பேதையனையாண்டவுனக்
கெத்தனைதான்றெண்டனிடுவேன்பராபரமே. (கூச)

தாயர்கர்ப்பத்தூடனமுர்தண்ணீருந்தந்தருளு
நேயவுனையாரோநினையார்பராபரமே. (கூரு)

விரிந்தமனமொடுங்கும்வேளையிறைகப்
பரந்தவருள்வாழிபதியேபராபரமே. (கூசு)

சிந்தனைபோய்நானெனல்போய்த்தேக்கவின்பமாமழை
யை, வந்துபொழிந்தனைநீவாழிபராபரமே. (கூஎ)

தந்தேனேயோர்வசனந்தந்தபடிக்கின்பமுமாய்
வந்தேனேயென்றனைநீவாழிபராபரமே. (கூஅ)

மண்ணும்விண்ணும்வந்துவணங்காவோநின்னருளைக்
கண்ணுறவுட்கண்டவரைக்கண்டாற்பராபரமே. (கஙக)

என்றுங்கருணைபெற்றவின்பத்தபோதனர்சொல்
சென்றசென்றதிக்கனைத்துஞ்செல்லும்பராபரமே. ()

ஆடுவதும்பாடுவதுமானந்தமாகநின்னைத்
தேடுவதுநின்னடியார்செய்கைபராபரமே. (கசக)

பொங்கியநின்றண்ணருளைப்புட்கலமாப்பெற்றவர்க
ட், கெங்கெழுந்தென்ஞாயிறியம்பாய்பராபரமே. ()

பாலரொடுபேயர்பித்தர்பான்மையெனநிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ்செய்கைபராபரமே. (கசங)

உண்டுடுத்துப்பூண்டிங்குலகத்தார்போற்றிரியுந்
தொண்டர்விளையாட்டேசுகங்காண்பராபரமே. (கசச)

கங்குல்பகலற்றதிருக்காட்சியர்கள்கண்டவழி
யெங்குமொருவழியேயெந்தாய்பராபரமே. (கசரு)

காயநிலையல்லவென்றுகாண்பாருறங்குவரோ
தூயவருட்பற்றுத்தொடர்வார்பராபரமே. (கசசு)

அப்புமுப்பும்போன்றவயிக்யபரானந்தர்தமக்
கொப்புவமைசொல்லவும்வாயுண்டோபாபராபரமே. ()

சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்குந்
கொத்தடிமையானகுடிநான்பராபரமே. (கசஅ)

தம்முயிர்போலெவ்வுயிருந்தானென்றுதண்ணருள்கூர்
செம்மையருக்கேவலென்றுசெய்வேன்பராபரமே. ()

விண்ணுக்கும்விண்ணாகிமேவுமுனக்கியான்பூசை
பண்ணிநிற்குமாறுபகராய்பராபரமே. (௧௫0)

நெஞ்சகமேகோயினினைவேசுகந்தமன்பே
மஞ்சனநீர்பூசைகொள்ளவாராய்பராபரமே. (௧௫௧)

கெட்டவழியாணவப்பேய்கீழாகமேலான
சிட்டருனைப்பூசைசெய்வார்பராபரமே. (௧௫௨)

கால்பிடித்துமூலக்கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிற்றேகம்விழுமோபராபரமே. (௧௫௩)

பஞ்சசுத்திசெய்துநின்னைப்பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சியஞானம்விளங்கும்பராபரமே. (௧௫௪)

அன்பர்பணிசெய்யவெனையாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந்தெய்தும்பராபரமே. (௧௫௫)

மூர்த்திதலந்தீர்த்தமுறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும்வாய்க்கும்பராபரமே. ()

விரும்புஞ்சரியைமுதன்மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோலன்றேபராபரமே. (௧௫௭)

தானந்தவந்தருமஞ்சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணையநல்லோர்பராபரமே. (௧௫௮)

சொன்னத்தைச்சொல்லித்துடிக்கின்றவாணவப்பேய்க்
கின்னல்வருவதெந்நாளெந்தாய்பராபரமே. (௧௫௯)

இன்றோவிருவினைவந்தேறியதுநானென்றோ
வன்றேவிளைந்ததன்றோவாற்றேன்பராபரமே. (௧௬0)

எண்ணமுந்தானின்னைவிட வில்லையென்றால்யான்மு
னமே, பண்ணவினையேதுப்கராய்பராபரமே. (கசுக)

என்னையின்னதென்றறியாவேழைக்குமாகெடுவேன்
முன்னைவினைகூடன்முறையோபராபரமே. (கசுஉ)

அறியாநான்செய்வினையையயாகீகூட்டுங்
குறியேதெனக்குளவுகூறாய்பராபரமே. (கசுங)

என்னைக்கெடுக்கவிசைந்தவிருவினைநோய்
தன்னைக்கெடுக்கத்தகாதோபராபரமே. (கசுச)

வல்லமையேகாட்டுகின்றமாமாயைநானொருவ
னில்லையெனினெங்கேயிருக்கும்பராபரமே. (கசுரு)

முக்குணத்தாலெல்லாமுளைக்கப்பிரகிருதிக்
கிக்குணத்தைநல்கியதாரொந்தாய்பராபரமே. (கசுசு)

ஆற்றப்படாதுதுன்பமையவென்றாலென்மனது
தேற்றப்படாதினியென்செய்வேன்பராபரமே. (கசுஎ)

பூராயமாய்மனதைப்போக்கவறியாமலையோ
யாராயலைந்தேனரசேபராபரமே. (கசுஅ)

சினமிறக்கக்கற்றாலுஞ்சித்தியெல்லாம்பெற்றாலு
மனமிறக்கக்கல்லார்க்குவாயேன்பராபரமே. (கசுகூ)

வாதுக்குவந்தெதிர்த்தமல்லரைப்போற்பாழ்த்தமன
மேதுக்குக்கூத்தாடுதெந்தாய்பராபரமே. (கஎ0)

சூதாடுவார்போற்றுவண்டுதுவண்டுமனம்
வாதாடினென்னபலன்வாய்க்கும்பராபரமே. (கஎக)

கொள்ளித்தேள்கொட்டிக் குதிக்கின்றபேய்க்குரங்
காய்,கள்ளமனந்துள்ளுவதென்கண்டாய்பராபரமே.

வந்ததையும்போனதையும்வைத்துவைத்துப்பார்த்தி
ருந்தாற், சிந்தையிசமகிதஞ்சேரும்பராபரமே. (கஎங)

ஏறுமயிர்ப்பாலமுணர்விந்தவிடயங்கணெருப்
பாறெனவுநன்றுவறிந்தேன்பராபரமே. (கஎச)

பொறிவழியேயேழைபொறியாயுழல்வதுநின்
னறிவின்விதித்தவிதியாமோபராபரமே. (கஎரு)

பாசசாலங்களெல்லாம்பற்றுவிடஞானவைவாள்
வீசநாளெந்நாள்விளம்பாய்பராபரமே. (கஎசா)

எந்தவுடலேனுமெடுத்தவுடனல்லதென்று
சிந்தைசெயவந்ததிறஞ்செப்பாய்பராபரமே. (கஎஎ)

பொய்யெல்லாமொன்றாப்பொருந்திவைத்தபொய்யு
டலை, மெய்யென்றான்மெய்யாய்விடுமோபராபரமே. ()

மின்னனையபொய்யுடலைமெய்யென்றுநம்பியையோ
நின்னைமறக்கைநெறியோபராபரமே. (கஎகூ)

நித்தியமொன்றில்லாதநீர்க்குமிழிபோன்றவுடற்
கித்தனைதான்றுன்பமுண்டோவென்னேபராபரமே. ()

தேகமிறுமென்றுசடர்தேம்புவதென்னித்திரையி
னாகமறிந்தாற்பயந்தானுண்டோபராபரமே. (கஅக)

ஏதைச்சுமையாவெடுப்பாரொடுத்தவுடற்
சேதமுறின்யாதுபின்னேசெல்லும்பராபரமே. (கஅஉ)

தோற்பாவைநாலாட்சுமையாருஞ்சீவன்றன்றிங்
கார்ப்பாலெடுத்ததெவராலேபராபரமே. (க௲ங)

ஞாலத்தைமெய்யெனவேநம்பிநம்பிநாளுமென்றன்
காலத்தைப்போக்கியென்னகண்டேன்பராபரமே. ()

பொய்யுலகவாழ்க்கைப்புலைச்சேரிவாதனைநின்
மெய்யருளின்மூழ்கின்விடுங்காண்பராபரமே, (க௲ரு)

நூலேணிவிண்ணேறநூற்குப்பருத்திவைப்பார்
போலேகருவிநன்னூற்போதம்பராபரமே. (க௲சா)

சின்னஞ்சிறியார்கள்செய்தமணற்சோற்றையொக்கு
மன்னுங்கலைஞானமார்க்கம்பராபரமே. (க௲எ)

வாசகஞானத்தால்வருமோசுகம்பாழ்த்த
பூசலென்றுபோமோபுகலாய்பராபரமே. (க௲அ)

கேட்டதையேசொல்லுங்கிளிபோலநின்னருளி
னூட்டமின்றிவாய்பேசனன்றோபராபரமே. (க௲கூ)

வெளியாயருளில்விரவுமன்பர்தேக
மொளியாய்ப்பிறங்கியதுமுண்டோபராபரமே. (க௲௰)

காலமொருமூன்றுங்கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார்நல்லோர்பராபரமே. (க௲க)

கொல்லாவிரதமொன்றுகொண்டவரோநல்லோர்மற்
றல்லாதார்யாரோவறியேன்பராபரமே. (க௲உ)

இல்லாதகாரியத்தையிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர்திறங்காண்பராபரமே. (க௲ங)

ஏதுவந்துமேதொழிந்துமென்னதியானென்றோர்கள்
போதநிலைகண்டபுலத்தோர்பராபரமே. (கககச)

ஆயிரஞ்சொன்னாலுமறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற்பிழைகாண்பராபரமே. (ககரு)

மாயமயக்கொழிந்தார்மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையினிற்பார்பராபரமே. (கககசா)

நித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களேநல்லதுறவோர்பராபரமே. (கககஎ)

என்னெஞ்சமேனுமிரங்குமேநின்னருட்குக்
கன்னெஞ்சருமுளரோகாட்டாய்பராபரமே. (கககஅ)

மந்தவறிவாகியின்பம்வாயாதிருந்தலைந்தாற்
சிந்தைமயங்காதோவென்செய்வேன்பராபரமே. ()

தேடினேன்றிக்கனைத்துந் தெண்டனிட்டேன்சிந்தை
நைந்து; வாடினேனென்மயக்கமாற்றாய்பராபரமே. ()

மடிமையெனுமொன்றைமறுத்தன்றேயுன்னை
யடிமைகொளல்வேண்டுமரசேபராபரமே. (உ0க)

காலர்பயந்தீரவின்பக்காற்கபயமென்றெழுந்த
மாலைவளர்த்தனையேவாழிபராபரமே. (உ0உ)

நீர்ப்புற்புதமாய்நினைவருட்கேநின்றழியப்
பார்ப்பதல்லால்வேறுமொன்றைப்பாரேன் பராபரமே.

நீர்க்குமிழிபோலென்னினைவுவெளியாய்க்கரையப்
பார்க்குமிடமெல்லாமென்பார்வைபராபரமே. (உ0ச)

ஆடியோய்பம்பரம்போலாசையுடனெங்குமுனைத்
தேடியோய்கின்றேனென்செய்வேன்பராபரமே. ()

வேதாந்தஞ்சித்தாந்தம்வேறென்னார்கண்களிக்கு
நாதாந்தமோனநலமேபராபரமே. (உ0சா)

ஆனந்தமானநின்னையன்றியொன்றையுன்னாத
மோனந்தமியேற்குமுத்திபராபரமே. (உ0எ)

ஏதுக்குமுன்னைவிடவில்லையென்றாலென்கருத்தைச்
சோதிக்கவேண்டாநான்சொன்னேன்பராபரமே. ()

முத்தியிலுந்தேகமிசைமூவிதமாஞ்சித்திபெற்றோ
ரொத்தவைபோலொன்றுரைப்பதெந்தாய்பராபரமே.(உ0கூ)

நீயன்றிநானார்நினைவாரொன்னெஞ்சகமார்
தாயன்றிச்சூலுமுண்டோசாற்றாய்பராபரமே. (உக0)

அங்கமேநின்வடிவமானசுகர்கூடப்பிடநீ
யெங்குமேனேனென்றதென்னேபராபரமே. (உகக)

கொள்ளைவெள்ளத்தண்ணருண்மேற் கொண்டுசுழித்
தார்த்திழுத்தாற், கள்ளமனக்கப்பலெங்கேகாணும்பரா
பரமே. (உகஉ)

எக்கலையுங்கற்றுணர்ந்தோமென்றவர்க்குஞ்சம்மதஞ்
சொல், வக்கணையாலின்பம்வருமோபராபரமே. ()

கல்லெறியப்பாசிகலைந்துநன்னீர்காணுநல்லோர்
சொல்லுணரின்ஞானம்வந்துதோன்றும்பராபரமே. ()

நின்னையுணர்ந்தோர்கடமைநிந்தித்தபேயறிஞ
ரென்னகதிபெறுவாரெந்தாய்பராபரமே. (உகரு)

என்னதியானென்னலற்றோங்கிருந்து பார்க்கினுநின்
சன்னிதியாநீபெரியசாமிபராபரமே. (உகசு)

சோற்றுத்துருத்திச்சுமைசுமப்பக்கண்பிதுங்கக்
காற்றைப்பிடித்தலைந்தேன் கண்டாய்பராபரமே. (உகஎ)

உள்ளபடியொன்றையுரைக்கினவர்க்குள்ளூறவாய்க்
கள்ளமின்றியன்பாய்க்களிப்பேன்பராபரமே. (உகஅ)

அடுத்தவியல்பாகவொன்றையான்பகர்வதல்லாற் [ரமே.
றொடுத்ததொன்றையான்வேண்டிச் சொல்லேன்பராப

உள்ளமறியாதொருவரொன்றையுன்னிப்பேசிலையோ
துள்ளியிளங்கன்றாய்த்துடிப்பேன்பராபரமே. (உஉ0)

எல்லாருமின்புற்றிருக்கநினைப்பதுவே
யல்லாமல்வேறொன்றறியேன்பராபரமே. (உஉக)

முன்னுண்மெய்ஞ்ஞானமுனிவர்தவமீட்டுதல்போ
லிந்நாளிற்காணவெனக்கிச்சைபராபரமே. (உஉஉ)

கன்மமென்பதெல்லாங்கரிசறவேமெய்ஞ்ஞான
தன்மநிலைசார்ந்ததன்பர்தன்மைபராபரமே. (உஉங)

கண்டுயிலாதென்னறிவின்கண்ணூடேகாட்சிபெற
மண்டியபேரொளிநீவாழிபராபரமே. (உஉச)

நானெனதன்மையென்றுநாடாமனூடவின்ப
வானுகின்றனைநீவாழிபராபரமே. (உஉரு)

அகத்தூடணுவணுவாயண்டமெல்லாந்தானாய்
மகத்தாகிநின்றனைநீவாழிபராபரமே. (உஉசு)

காரகமாங்கர்ப்பவறைக்கண்ணூடுமென்கண்ணே
வாரம்வைத்துக்காத்தனை நீவாழிபராபரமே. (உஉஎ)

புரந்தோர்தந்தேசமென்பார்பூமியைப்போராடி
யிரந்தோருந்தம்மதென்பாரென்னேபராபரமே. (உஉஅ)

மூர்த்தியெல்லாம்வாழியெங்கண்மோனகுருவாழிய
ருள்,வார்த்தையென்றும்வாழியன்பர்வாழிபராபரமே.

சொல்லும்பொருளுந்தொடராவருணிறைவிற்
செல்லும்படிக்கருணீசெய்தாய்பராபரமே. (உ௩0)

இற்றைவரைக்குள்ளாகவெண்ணரியசித்திமுத்தி
பெற்றவர்களெத்தனைபேர்பேசாய்பராபரமே. (உ௩க)

நாடுநகருநிசாளுட்டியபாளயமு
மீடுசெயுமோமுடிவிலெந்தாய்பராபரமே. (உ௩உ)

தேடுந்திரவியமுஞ்சேர்ந்தமணிப்பெட்டகமுங்
கூடவருந்துணையோகூறாய்பராபரமே. (உ௩௩)

தேடாததேட்டினமோசெங்கைத்துலாக்கோல்போல்
வாடாச்சமனிலையில்வாழ்வார்பராபரமே. (உ௩௪)

நீராய்க்கசிந்துருகிநெட்டுயிர்த்துநின்றேனைப்
பாராததென்னோபகராய்பராபரமே. (உ௩௫)

உள்ளபொருளாவியுடன்மூன்றுமன்றேதான்
கொள்ளைகொண்டநீயென்குறைதீர்பராபரமே.(உ௩௬)

ஆழ்ந்தாயேயிவ்வுலகிலல்லலெல்லாந்தீர்ந்தருளால்
வாழ்ந்தாயேயென்றனைநீவாழிபராபரமே. (உ௩எ)

தாராவருளையெல்லாந்தந்தெனையுநின்னருளில்
வாராயோவென்றனைநீவாழிபராபரமே. (உருஅ)

ஆசையுன்மீதல்லாலருளறியவேறுமொன்றிற்
பாசம்வையேனின்கருணைப்பாங்காற்பராபரமே(உருகூ)

ஆதியந்தநீகுருவாயாண்டதல்லானின்னையன்றிப்
போதனையுமுண்டோபுகலாய்பராபரமே. (உசo)

தானாகவந்துதடுத்தாண்டெனையின்ப
வானாகச்செய்தவின்பவானேபராபரமே. (உசக)

பற்றற்றிருக்குநெறிபற்றிற்கடன்மலையுஞ்
சுற்றநினைக்குமனஞ்சொன்னேன்பராபரமே. (உசஉ)

படிப்பற்றுக்கேள்வியற்றுப்பற்றற்றுச்சிந்தைத்
துடிப்பற்றார்க்கன்றோசுகங்காண்பராபரமே. (உசங)

சத்தாகிநின்றோர்சடங்களிலிங்கமென
வைத்தாருமுண்டேயென்வாழ்வேபராபரமே. (உசச)

சித்தநிருவிகற்பஞ்சேர்ந்தாருடற்றீபம்
வைத்தகர்ப்பூரம்போல்வயங்கும்பராபரமே. (உசரு)
ஆதிகாலத்திலெனையாண்டனையேயிப்பானீ
போதியெனினெங்கேநான்போவேன்பராபரமே. ()

நாவழுத்துஞ்சொன்மலரோநாளுநிக்கும்பொன்மல
ரோ, தேவையுனக்கின்னதென்றுசெப்பாய்பராபரமே.

கன்னறரும்பாகாய்க்கருப்புவட்டாய்க்கற்கண்டா
யின்னமுதாயென்னுளிருந்தாய்பராபரமே. (உசஅ)

சிற்பரமேதற்பரமேதெய்வசுருதிசொன்ன
வற்புதமேயன்பேயறிவேபராபரமே. (உசக)

அறிவிப்பானீயென்றாலைம்புலன்கடந்த
நெறிநிற்பார்யாரோநிகழ்த்தாய்பராபரமே. (உருo)

அந்தக்கரணமெனுமாகாதபேய்களெனை
வந்துபிடித்தாட்டவழக்கோபராபரமே. (உருக)

ஐவரொடுங்கூடாமலந்தரங்கசேவைதந்த
தெய்வவறிவேசிவமேபராபரமே. (உருஉ)

அருளாகிநின்றசுகமாகாமலையோ
விருளாகிநிற்கவியல்போபராபரமே. (உருங)

அன்பரொல்லாமின்பமருந்திடவும்யானொருவன்
றுன்புறுதனன்றோநீசொல்லாய்பராபரமே. (உருச)

சந்ததமுநின்கருணைசாற்றுவதல்லால்வேறு
சிந்தையறியேனுன்சித்தம்பராபரமே. (உருரு)

நானெனக்குளாறுநாட்டத்தாலென்னைவிட்டுப்
போனாலுமுன்னைவிட்டுப்போகேன்பராபரமே. (உருசு)

இக்காயம்பொய்யன்றோநீட்டத்துணக்கபயம்
புக்காதாருண்டோபுகலாய்பராபரமே. (உருஎ)

தானாதல்பூரணமேசாருமிடமுண்டுயிரும்
வானாதியுமொழுங்காய்மன்னும்பராபரமே. (உருஅ)

உன்னுமனங்கர்ப்பூரவுண்டைபோலேகரைய
மின்னுமானந்தவிளக்கேபராபரமே. (உருகூ)

நாட்பட்டலைந்தநடுக்கமெலாந்தீரவுனைக்
காட்பட்டுந்துன்பமெனக்காமோபராபரமே. (உசுO)

பாவிபடுங்கண்கலக்கம்பார்த்துமிரங்காதிருந்தா
லாவிக்குறுதுணையாரையாபராபரமே. (உசுக)

நின்னிறைவேதாரகமாய்நின்றுசுகமெய்தாம
லென்னிறைவேபாவித்தேனென்னேபராபரமே (உசுஉ)

நின்னைச்சரண்புகுந்தானீகாக்கல்வேண்டுமல்லா
லென்னைப்புறம்விடுதலென்னேபராபரமே. (உசுரு)

மாருதந்துன்பமெல்லாம்வந்துரைத்தானின்செவியி
லேறுதவாறேதியம்பாய்பராபரமே. (உசுச)

விஞ்சுபுலப்பாடனைத்தும்வீறுதுன்பஞ்செய்யவந்த
வஞ்சுபுலவேடருக்குமாற்றேன்பராபரமே. (உசுரு)

கன்னங்கரியநிறக்காமாதிராக்ஷசப்பேய்க்
கென்னையிலக்காகவைத்ததென்னேபராபரமே. (உசுசு)

சித்திநெறிகேட்டல்செகமயக்கஞ்சன்மமற
முத்திநெறிகேட்டன்முறைகாண்பராபரமே. (உசுஎ)

சிந்தைசிதையச்சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந்தெய்தும்பராபரமே. (ரு சுஅ)

கூர்த்தவறிவாலறியக்கூடாதெனக்குரவன்
தேர்த்தபடிதானேதிரிந்தேன்பராபரமே. (உசுகூ)

பத்தருந்தும்பரமசுகம்யானருந்த
வெத்தனைநாள்செல்லுமியம்பாய்பராபரமே. (உஎ0)

தீரத்திறற்றுறவுசேராமலிவ்வுலகிற்
பாரத்தனம்பேசல்பண்போபராபரமே. (௨௭௧)

இந்தவெளியிலேயுண்டேப்பமிடப்பேரறிவாத்
தந்தவெளிக்கேவெளியாய்ச்சார்ந்தேன்பராபரமே. ()

உணர்த்துமுனைநாடாதுணர்ந்தவையேநாடி
யிணக்குறுமென்னேழமைதானென்னேபராபரமே. ()

உண்டுபோலின்றுமுலகைத்திரமெனவுட்
கொண்டுநான்பெற்றபலன்கூறாய்பராபரமே. (௨௭௪)

உள்ளபடியாதுமெனவுற்றுணர்ந்தேனக்கணமே
கள்ளமனம்போனவழிகாணேன்பராபரமே. (௨௭௫)

சித்தமவுனஞ்செயல்வாக்கெலாமவுனஞ்
சுத்தமவுனமென்பாற்றோன்றிற்பராபரமே. (௨௭௬)

எண்ணில்பலகோடியுயிரொத்தனையோவத்தனைக்குங்
கண்ணிற்கலந்தவருட்கண்ணேபராபரமே. (௨௭௭)

எனக்கினியாருன்போலுமில்லையென்றல்யானு
முனக்கினியானாகாவுளவேன்பராபரமே. (௨௭௮)

அண்டபிண்டங்காணேனகமும்புறமுமொன்றுக்
கண்டவென்னைநீகலந்தகாலம்பராபரமே. (௨௭௯)

எத்தனையோகோடியெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ்
சித்தமிரங்கிலையென்செய்வேன்பராபரமே. (௨௮௦)

அன்றநந்நால்வருக்குமற்புதமாநீயுரைத்த
தொன்றநந்தவார்த்தையெனக்குண்டோபராபரமே. ()

அப்பனென்றுமன்னையென்றுமாரியனென்றும்முனையே, செப்புவதுமுன்னிலையின்சீர்காண்பராபரமே. ()

கட்டுங்கனமுமந்தக்காலர்வரும்போதெதிர்த்து
வெட்டுந்தளமோவிளம்பாய்பராபரமே. (உஅங)

பேசாதமோனநிலைபெற்றன்றோநின்னருளாம்
வாசாமகோசரந்தான்வாய்க்கும்பராபரமே. (உஅச)

கற்றாலுங்கேட்டாலுங்காயமழியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோபேசாய்பராபரமே. (உஅரு)

கண்டவடிவெல்லாங்கரைக்கின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளேயன்றோபராபரமே.(உஅசு)

தன்செயலாலொன்றுமிலைதானென்றுஞன்பாவி
நின்செயலாய்நில்லாநிலைவேன்பராபரமே. (உஅஎ)

கொலைகளவுகட்காமங்கோபம்விட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடான்வாய்க்கும்பராபரமே. ()

தன்னையறியாதுசகந்தானுயிருந்துவிட்டா
லுன்னையறியவருளுண்டோபராபரமே. (உஅகூ)

ஒன்றிரண்டென்றுன்னுவுணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமென்னைவையாயிறையேபராபரமே. (உகூo)

கருதுமடியார்களுளங்காணவெளியாகுந்
துரியநிறைவானசுகமேபராபரமே. (உகூக)

பொய்குவித்தநெஞ்சனருட்பொற்பறிந்துதிக்கனைத்துங், கைகுவித்துநிற்பதெந்தக்காலம்பராபரமே, ()

அத்துவிதமானவயிக்யவனுபவமே
சுத்தநிலையந்நிலையார்சொல்வார்பராபரமே. (உகங)

வைத்தசுவரலம்பின்மண்போமோமாயையினோர்க்
கெத்தனைபோதித்துமென்னுமெந்தாய்பராபரமே. ()

பூட்டற்றுத்தேகமற்றுப்போகுமுன்னேநின்னருளைக்
காட்டத்தகாதோவென்கண்ணேபராபரமே. (உகரு)

சொல்லிறப்பதர்களைந்துசொன்முடிவுகாணுதார்
நெல்லிறப்பதர்போலநிற்பார்பராபரமே. (உகசா)

அழுக்காற்றுனெஞ்சமழுங்கியபுன்மாக்க
ளிழுக்காற்றுலின்பநலமெய்தார்பராபரமே. (உகஎ)

தேகாதிபொய்யெனவேதேர்ந்தவுபசாந்தருக்கு
மோகாதியுண்டோமொழியாய்பராப்ரமே. (உகஅ)

சாதனையெல்லாமவிழத்தற்போதங்காட்டாதோர்
போதனைநீநல்குவதெப்போதோபராபரமே. (உகக)

ஒன்றுமறியாவிருளாமுள்ளம்படைத்தவெனக்
கென்றுகதிவருவதெந்தாய்பராபரமே. (ஙOO)

சிந்திக்குந்தோறுமென்னுட்சிற்சுகமாயூற்றூறிப்
புந்திக்குணின்றவருட்பொற்பேபராபரமே. (ஙOக)

என்றுமடைந்தோர்கட்கிரங்கார்குறிப்பனைத்துங்
கன்றையுதைகாலிகதைகாண்பராபரமே. (ஙOஉ)

குற்றங்குறையக்குணமேமேலிடவருளை
யுற்றவரோயாவிக்குறவாம்பராபரமே. (ஙOங)

ஒருமையால்வாய்க்குமுண்மைக் கோரனந்த நூல்கோடி-
ப், பெருமையாற்பேசிலென்னபேராம்பராபரமே. ()

சொல்லுஞ்சமயநெறிச்சுற்றுக்குளேசுழலு
மல்லலொழிவதென்றைக்கையாபராபரமே. (௩0௫)

பிடித்ததையேஸ்தாபிக்கும்பேராணவத்தை
யடித்துத்துரத்தவல்லாரார்காண்பராபரமே. (௩0௬)

நேசத்தானின்னைநினைக்குநினைவுடையார்
ஆசைக்கடலிலழுந்தார்பராபரமே. (௩0௭)

கள்ளாதுகட்டுணவுங்காரியமோநாமொருசொல்
கொள்ளாததோஷமன்றோகூறாய்பராபரமே. (௩0௮)

சென்றவிடமெல்லாந்திருவருளேதாரகமா
நின்றவர்க்கேயானந்தநிட்டைபராபரமே. (௩0௯)

நீட்சிகுறுகலில்லாநித்யசுகாரம்பசக
சாக்ஷியாமுன்னைவந்துசார்ந்தேன்பராபரமே. (௩௧0)

வாறுநிதத்துவமாய்மன்னிநின்றகாரணநீ
நாறுகிநிற்பதெந்தநாளோபராபரமே. (௩௧௧)

காட்டத்திலங்கிகடையவந்தாலென்னவுன்னும்
நாட்டத்தினூடுவந்தநட்பேபராபரமே. (௩௧௨)

நித்திரையாய்த்தானேநினைவயர்ந்தாணித்தநித்தம்
செத்துபிழைப்பானதெங்கள்செய்கைபராபரமே. ()

இன்பநிட்டையெய்தாமல்யாதெனினுஞ்சென்றுமனம்
துன்புறுதல்வன்பிறவித்துக்கம்பராபரமே. (௩௧௪)

பொய்யகலமெய்யானபோதநிலைகண்டோர்க்கோ
ரையமிலையையமிலையையாபராபரமே. (௩௧௫)

மந்திரத்தையுன்னிமயங்காதெனக்கினியோர்
தந்திரத்தைவைக்கத்தகாதோபராபரமே. (௩௧௬)

விண்கருணைபூத்ததென்னமேவியுயிர்க்குயிராய்த்
தண்கருணைதோன்றவருடாய்நீபராபரமே. (௩௧௭)

தன்மயமாய்நின்றநிலைதானேதானாகிநின்று
ஷின்மயமாயெல்லாநிகழும்பராபரமே. (௩௧௮)

ஏங்கியிடையுநெஞ்சவேழையைநீவாவென்றே
பாங்குபெறச்செய்வதுன்மேற்பாரம்பராபரமே. ( )

ஆண்டநின்னைநீங்காவடிமைகள்யாமாணவத்தைப்
பூண்டதென்னகன்மம்புகலாய்பராபரமே. (௩௨௦)

எங்கணுநீயென்றுலிருந்தபடியெய்தாம
லங்குமிங்குமென்றலையலாமோபராபரமே. (௩௨௧)

கற்குமதுவுண்டுகளித்ததல்லானின்னருளி
னிற்குமதுதந்ததுண்டோநீதான்பராபரமே. (௩௨௨)

அண்டபகிரண்டமறியாதநின்வடிவைக்
கண்டவரைக்கண்டாற்கதியாம்பராபரமே. (௩௨௩)

கலக்கமுறநெஞ்சைக்கலக்கித்திரும்பத்
துலக்குபவனீயலையோசொல்லாய்பராபரமே. (௩௨௪)

சிந்தையுமென்போலச்செயலற்றடங்கிவிட்டால்
வந்ததெலாநின்செயலாவாழ்வேன்பராபரமே. (௩௨௫)

பந்தமெலாந்தீரப்பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவைமறவேன்பராபரமே. (௩௨௬)

தானந்தமானசகசநிருவிகற்ப
வானந்தநிட்டையருளையாபராபரமே. (௩௨௭)

அல்லலெல்லாந்தீரவெனக்கானந்தமாகவொரு[பரமே.
சொல்லையென்பால்வைத்ததையென் சொல்வேன்பரா

சிந்தைமயக்கமறச்சின்மயமாய்நின்றவுன்னைத்
தந்தவுனக்கென்னையுநான்றந்தேன்பராபரமே. (௩௨௯)

மைகாட்டுமாயைமயக்கமறநீகுருவாய்க்
கைகாட்டவுங்கனவுகண்டேன்பராபரமே. (௩௩0)

மால்வைத்தசிந்தைமயக்கறவென்சென்னிமிசைக்
கால்வைக்கவுங்கனவுகண்டேன்பராபரமே. (௩௩௧)

மண்ணுனமாயையெல்லாமாண்டுவெளியாகவிரு
கண்ணுரவுங்கனவுகண்டேன்பராபரமே. (௩௩௨)

மண்ணீர்மையாலேமயங்காதுன்கையாலென்
கண்ணீர்துடைக்கவுநான்கண்டேன்பராபரமே (௩௩௩)

உள்ளதுணராவுணர்விலிமாபாவியென்றே
மெள்ளமெள்ளக்கைநெகிழவிட்டாய்பராபரமே. ()

எல்லாநினதுசெயலென்றெண்ணுமெண்ணமுநீ
அல்லாலெனக்குளதோவையாபராபரமே. (௩௩௫)

பந்தமயக்கிருக்கப்பற்றொழிந்தேனென்றளறு
மிந்தமயக்கமெனக்கேன்பராபரமே. (௩௩௬)

காட்சியெல்லாங்கண்ணைவிடக் கண்டதுண்டோயா
தினுக்கு; மாட்சியுனதருளேயன்றோபராபரமே. ()

எட்டுத்திசையுமொன்றாயின்பமாய்நின்றவுன்னை
விட்டுப்பிரியவிடம்வேறோபராபரமே. (௩௩௮)

பிறியாதுயிர்க்குயிராய்ப்பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவேசிவமேபராபரமே. (௩௩௯)

ஏதேதுசொன்னாலுமெள்ளளவுநீயிரங்காச்
சூதேதெனக்குளவுசொல்லாய்பராபரமே. (௩௪0)

கற்பனையாய்பாடுகின்றேன்கண்ணீருங்கம்பலையும்
சொற்பனத்துங்காணேனென்சொல்வேன்பராபரமே.

வன்பொன்றுநீங்காமனதிறப்பமாறாப்பேர்
அன்பொன்றும்போதுமெனக்கையாபராபரமே. ()

ஏதுந்தெரியாவெளியேனைவாவெனநின்
போதநிலைகாட்டிற்பொறாதோபராபரமே. (௩௪௩)

ஓராமலெல்லாமொழிந்தேற்குன்றெய்வவரு
ளாராதிருக்கத்தகுமோபராபரமே. (௩௪௪)

மோனந்தருஞானமூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கையருளாய்பராபரமே. (௩௪௫)

வாடுமுகங்கண்டென்னைவாடாமலேகாத்த
நீடுங்கருணைநிறைவேபராபரமே. (௩௪௬)

புந்தியினானின்னடியைப்போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிறப்போநின்றியானம்பராபரமே. (௩௪௭)

உனக்குவமையாக்கருணையுள்ளவரும்வன்மைக்
கெனக்குவமையானவருமில்லைபராபரமே. (௩௪அ)

தாயிருந்தும்பிள்ளைதளர்ந்தாற்போலெவ்விடத்து
நீயிருந்துநான்றளர்ந்துநின்றேன்பராபரமே. (௩௪௯)

வாயாற்கிணறுகெட்டவாறேபோல்வாய்பேசிப்
பேயானோர்க்கின்பமுண்டோபேசாய்பராபரமே.(௩௫௦)

பாவமென்றாலேதும்பயமின்றிச்செய்யுவிந்தச்
சீவனுக்கார்போதந்தெரித்தார்பராபரமே. (௩௫௧)

இன்பநிருவிகற்பமின்றேதாவன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிதுசொன்னேன்பராபரமே. ()

கற்குநிலைகற்றுற்கருவியவிழாதருளாய்
நிற்குநிலைகற்பதுவேநீதம்பராபரமே. (௩௫௩)

காச்சச்சுடர்விடும்பொற்கட்டிபோனின்மலமாய்ப்
பேச்சற்றவரோபிறவார்பராபரமே. (௩௫௪)

பற்றொழிந்துசிந்தைப்பதைப்பொழிந்துதானேதா
னற்றிருப்பதென்றைக்கமைப்பாய்பராபரமே (௩௫௫)

உருவெளிதான்வாதவூருத்தமர்க்கல்லாலினமுங்
குருவழிநின்றார்க்குமுண்டோகூறாய்பராபரமே. ()

தேகமியாதேனுமொருசித்திபெறச்சீவன்முத்தி
யாகுநெறிநல்லநெறியையாபராபரமே. (௩௫௭)

உலகநெறிபோற்சடலமோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்தவியல்போபராபரமே. (௩௫அ)

பரமாப்பரவெளியாய்ப்பார்ப்பதல்லான்மற்றெவர்க்குந்
திரமேதுமில்லைநன்றுத்தேர்ந்தேன் பராபரமே. (௩௫௯)

தேடுவேனின்னருளைத்தேடுமுன்னேயெய்தினட
மாடுவேனானந்தமாவேன் பராபரமே. (௩௬௦)

உள்ளங்குழையவுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்றுகாண்பேன் பராபரமே. (௩௬௧)

பட்டப்பகற்போலப்பாழ்த்தசிந்தைமாளினெல்லாம்
வெட்டவெளியாகவிளங்கும்பராபரமே. (௩௬௨)

பார்க்கினணுப்போற்கிடந்தபாழுஞ்சிந்தைமாளினெ
ன்னை, யார்க்குச்சரியிடலாமையாபராபரமே. (௩௬௩)

பாட்டுக்கோவன்பினுக்கோபத்திக்கோவன்பர்தங்க
ணீட்டுக்கெல்லாங்குறுகினின்றாய்பராபரமே. (௩௬௪)

முத்தாந்தவித்தேமுளைக்குநிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச்சிறப்பேபராபரமே. (௩௬௫)

உன்றாவெளியாயுறங்காதபேருணர்வா
யென்றாவிக்குள்ளேயிருந்தாய்பராபரமே. (௩௬௬)

தத்துவமெல்லாமகன்றதன்மையர்க்குச்சின்மயமா
நித்தமுத்தசுத்தநிறைவேபராபரமே. (௩௬௭)

உள்ளக்கொதிப்பகலவுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்கருணைவேண்டும்பராபரமே. (௩௬௮)

என்னைப்புரப்பதருளின்கடனுமென்கடனு
நின்னிற்பணியரவேநிற்கைபராபரமே. (௩௬௯)

தானேயானன்னிலையைத்தந்தவருளானந்த
வானேமனதீதவாழ்வேபராபரமே. (௩எ0)

மண்ணாதிபூதமெல்லாம்வைத்திருந்தநின்னிறைவைக்
கண்ணாரக்கண்டுகளித்தேன்பராபரமே. (௩எக)

அறியாமையீதென்றறிவித்தவன்றேதான்
பிறியாவருணிலையும்பெற்றேன்பராபரமே. (௩எ௨)

தீதெனவுநன்றெனவுந்தேர்ந்துநான்றேர்ந்தபடி
யேதுநடக்கவொட்டாதென்னேபராபரமே. (௩எ௩)

கண்டவறிவகண்டாகாரமெனமெய்யறிவிற்
கொண்டவர்க்கேமுத்திகொடுப்பாய்பராபரமே.(௩எச)

ஈருகவல்வினைநானென்னுமலின்பசுகம்
பேரும்படிக்கடிமைபெற்றேன்பராபரமே. (௩எ௫)

பெற்றாரனுபூதிபேசாதமோனநிலை
கற்றாருனைப்பிரியார்கண்டாய்பராபரமே. (௩எசா)

நீயேநானென்றுநினைப்புமறப்புமறத்
தாயேயனையவருடந்தாய்பராபரமே. (௩எஎ)

சஞ்சலமற்றெல்லாநீதானென்றுணர்ந்தேனென்
னஞ்சலியுங்கொள்ளாயரசேபராபரமே. (௩எஅ)

பூதமுதனாதவரைபொய்யென்றமெய்யரெல்லாங்
காதலித்தவின்பக்கடலேபராபரமே. (௩எகூ)

வாக்குமனமொன்றுபட்ட வார்த்தையல்லால்வெவ் வேறாய்ப், போக்குடையவார்த்தை பொருந்தேன்பராபரமே. (௩அ0)

வன்மையின்றியெல்லா மதித்துணர்வாய்க்காகெடுவே
ன், றன்மையொன்றுந்தோயாத்தடையோபராபரமே.

பத்தர்சித்தர்வாழிபரிபக்குவர்கள்வாழிசெங்கோல்
வைத்தவர்கள்வாழிகுருவாழிபராபரமே. (௩௮௨)

கல்லாதேனுனலுங்கற்றுணர்ந்தமெய்யடியார்
சொல்லாலேநின்னைத்தொடர்ந்தேன்பராமரமே. ()

சொல்லிறப்பச்சற்குருவாய்த் தோன்றிச்சுகங்கொடுத்
த, நல்லுணாக்கேகொத்தடிமைநான்காண்பராபரமே.()

மூத்திக்குவித்தானமோனக்கரும்புவழி
தித்தித்திடவிளைந்ததேனேபராபரமே. (௩௮௫)

நித்திரையும்பாழ்த்தநினைவுமற்றுநிற்பதுவோ
சுத்தவருணிலைநீசொல்லாய்பராபரமே. (௩௮௬)

மண்ணுமறிகடலுமற்றுளவுமெல்லாமுன்
கண்ணிலிருக்கவுநான்கண்டேன்பராபரமே. (௩௮௭)

பூட்டிவைத்துவஞ்சப்பொறிவழியேயென்றனைநீ
யாட்டுகின்றதேதோவறியேன்பராபரமே. (௩௮௮)

பொய்யுணர்வாயிந்தப்புழுக்கூட்டைக்காத்திருந்தே
யுய்யும்வகையுமுளதோபராபரமே. (௩௮௯)

---

## பைங்கிளிக்கண்ணி.

அந்தமுடனாதியளவாமலென்னறிவிற்
சுந்தரவான்சோதிதுலங்குமோபைங்கிளியே. (க)

அகமேவுமண்ணலுக்கென்னலலெல்லாஞ்சொல்லிச்
சுகமானநீபோய்ச்சுகங்கொடுவாபைங்கிளியே. (உ)

ஆவிக்குளாவியெனுமற்புதனார்சிற்சுகந்தான்
பாவிக்குங்கிட்டுமோசொல்லாய்நீபைங்கிளியே. (௩)

ஆருமறியாமலெனையந்தரங்கமாகவந்து
சேரும்படியிறைக்குச்செப்பிவாபைங்கிளியே. (௪)

ஆறான கண்ணீர்க்கென்னங்கபங்கமானதையுங்
கூறுதலெதென்னோதூதலமொழிப்பைங்கிளியே. (௫)

இன்பருளவாடையழுக்கேறுமெமக்கண்ணல்சுத்த
வம்பரமாமாடையளிப்பானோபைங்கிளியே. (௬)

உன்றுமலொன்றிரண்டென்றூராமல்வீட்டுநெறி
சொன்னான்வரவும்வகைசொல்லாய்நீபைங்கிளியே. (எ)

ஊருமிலார்பேருமிலாருற்றார்பெற்றாருடனே
யாருமிலாரென்னையறிவாரோபைங்கிளியே. (அ)

ஊரைப்பாராமலெனக்குள்ளகத்துநாயகனார்
சீரைப்பார்த்தாற்கருணைசெய்வாரோபைங்கிளியே. (௯)

என்றுவிடியுமிறைவாவோவென்றன்று
நின்றநிலையெல்லாநிகழ்த்தாய்நீபைங்கிளியே. (க0)

எந்தமடலூடுமெழுதாவிறைவடிவைச்
சிந்தைமடலாவெழுதிச்சேர்ப்பேனோபைங்கிளியே. ()

கண்ணுண்மணிபோலின்பங்காட்டியெனைப்பிரிந்த
திண்ணியருமின்னம்வந்துசேர்வாரோபைங்கிளியே. ()

ஏடார்மலர்சூடேனெம்பெருமான்பொன்னடியாம்
வாடாமலர்முடிக்குவாய்க்குமோபைங்கிளியே. (க௩)

கல்லேன்மலரோன்கனிந்தவன்பேபூசையென்ற
நல்லோர்பொல்லாவெனையுநாடுவரோபைங்கிளியே. ()

கண்டதனைக்கண்டுகலக்கந்தவிரெனவே
விண்டபெருமானையுநான்மேவுவனோபைங்கிளியே. ()

காணாதகாட்சிகருத்துவந்துகாணாமல்
வீணாள்கழித்துமெலிவேனோபைங்கிளியே. (க௬)

காந்தமிரும்பைக்கவர்ந்திழுத்தாலென்னவருள்
வேந்தனெனையிழுத்துமேவுவனோபைங்கிளியே. (கஎ)

காதலால்வாடினனாங்கண்டனையேயெம்மிறைவர்
போதரவாயின்பம்புசிப்பேனோபைங்கிளியே. (க௮)

கிட்டிக்கொண்டன்பருண்மைகேளாப்பலவடிகொள்
பட்டிக்குமின்பமுண்டோசொல்லாய்நீபைங்கிளியே. )

கிட்டோராய்நெஞ்சிற்கிளவார்தழுவவென்று
னெட்டோராவரவர்நேசமென்னோபைங்கிளியே. (உ0)

கூறுங்குணமுமில்லாக்கொள்கையினோன்கவலை
யாறும்படிக்குமணைவாரோபைங்கிளியே. (உக)

சின்னஞ்சிறியேன்றன்சிந்தைகவர்ந்தாரிறைவர்
தன்னந்தனியேதவிப்பேனோபைங்கிளியே. (உஉ)

சிந்தைமருளைத்தெளிவித்தெனையாள
வந்தகுருநாதனருள்வாய்க்குமோபைங்கிளியே. (உ௩)

சொல்லிறந்துநின்றசுகருபப்பெம்மானை
யல்லும்பகலுமணைவேனோபைங்கிளியே. (உ௪)

தற்போதத்தாலேதலைகீழதாகவைய
னற்போதவின்புவரநாட்செலுமோபைங்கிளியே. (உ௫)

தன்னையறியுந்தருணந்தனிற்றலைவ [யே.
னென்னையணையாதவண்ண மெங்கொளித்தார்பைங்கிளி

தாங்கரியமையலெல்லாந் தந்தெனைவிட்டின்னருளா
ம், பாங்கியைச்சேர்ந்தாரிறைக்குப்பண்போசொல்பை
ங்கிளியே. (உ௭)

தாவியதோர்மர்க்கடமாந்தன்மைவிட்டேயண்ணலிடத்
தோவியம்போனிற்கினெனையுள்குவரோ பைங்கிளியே.

திராக்கருவழக்கைத்தீர்வையிட்டங்கென்னையினிப்
பாரோருதாண்டானைப்பற்றுவனோபைங்கிளியே. (உ௯)

தூங்கிவிழித்தென்னபலன்றூங்காமற்றூங்கிநிற்கும்
பாங்குகண்டாலன்றோபலன்காண்பேன்பைங்கிளியே.

தொல்லைக்கவலைதொலைத்துத்தொலையாத
வெல்லையிலாவின்பமயமெய்துவனோபைங்கிளியே. ()

நன்னெஞ்சத்தன்பரொல்லாநாதனைச்சேர்ந்தின்பனை
ந்தார், வன்னெஞ்சத்தாலேநான்வாழ்விழந்தேன்பைங்
கிளியே. (௩உ)

நானேகருதின்வரநாடார்சும்மாவிருந்தாற்
றானேயணைவரவர்தன்மையென்னோபைங்கிளியே. ()

